# நவசீன சிற்பி
# மா-சே-துங்

என். ராமகிருஷ்ணன்

# நவசீன சிற்பி மா சே துங்

என். ராமகிருஷ்ணன்

சென்னை புக்ஸ்

NAVA SEENA SIRPPI MAO TSE TUNG

N. RAMAKRISHNAN

First Print : June 1990

Printed at : A. L. R. Printers
No. 10/2, Prof. Sanjeevi Street,
Mylapore, Madras-600 004.

Published by : Chennai Books
6, Thayar Sahib Second lane
Madras—600 002

RS: 16-00




நவசீன சிற்பி மா சே துங்

என். ராமகிருஷ்ணன் ©

முதல் பதிப்பு: ஜூன் 1990

அச்சு : ஏ. எல். ஆர். பிரிண்டர்ஸ்
10/2, புரொபஸர் சஞ்சீவி தெரு,
மைலாப்பூர், சென்னை-600 004.

வெளியீடு : சென்னை புக்ஸ்
6, தாயார் சாகிப் 2வது சந்து
சென்னை—600 002

ரூ. 16-00

# ஆசிரியர் குறிப்பு

நவசீன நாட்டின் புகழ்மிக்க தலைவரும், அந் நாட்டை சோசலிசப் பாதையில் அழைத்துச் செல்வ தற்கான மகத்தான புரட்சிக்குத் தலைமை தாங்கிய வருமான மா சே துங் அவர்களின் சுருக்கமான வரலாறு தான் இந்நூல்.

கோடிக்கணக்கான மக்களை பிரபுத்துவ அடிமைத் தளையிலிருந்து விடுவித்து, வறுமையில் ஆழ்த்தப்பட் டிருந்த அவர்களுக்கு வளமிக்க வாழ்வளித்து, அறியாமை யில் ஆழ்த்தப்பட்டிருந்த அவர்களுக்கு மார்க்சிய அறிவொளி கிடைக்கச்செய்து, அவர்களை சோசலிச மனிதர்களாக உருவாக்கிய மாபெரும் சீனப்புரட்சியின் மகத்தான வழிகாட்டி அவர் !

உலக வரலாற்றின் மகத்தான சாதனைகளுள் ஒன்றான சீனப் புரட்சிக்கு வித்திட்ட தலைவர் மா சே துங்.

அவருடைய சாதனையின் சிறப்பை அவர் வாழ்ந்த காலத்தின் பின்னணியில் காணும்பொழுதுதான் அறிய முடியும்.

இந்த நூலானது, பிரதானமாக ''Mao Zedong Biograpy —Asessment—Reminisences'' என்ற நூலை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளது. அது போக, நினியன் ஸ்மார்ட் என்பவர் எழுதிய ''மாவோ'' என்ற ஆங்கில நூலும், மறைந்த அறிஞர் வெ. சாமிநாத சர்மா அவர்கள் எழுதிய ''சீனாவின் வரலாறு'' என்ற நூலும், ஹோ-கான்-சி எழுதிய ''நவசீனப் புரட்சியின்

வரலாறு'' என்ற நூலும், ரஜனி பாமிதத் எழுதிய ''இன்றைய இந்தியா'' என்ற நூலும் பெரிதும் பயன்படுத்தப் பட்டுள்ளது. இந்த நூலாசிரியர்கள் அனைவருக்கும் நன்றி தெரிவிக்கப்படுகின்றது.

இந்த நூலை மனமுவந்து வெளியிடும் சென்னை புக்ஸ் நிலையத்தாருக்கும் அதே நன்றி உரித்தாக்கப் படுகின்றது.

என். ராமகிருஷ்ணன்



இடமிருந்து வலம்: யேனானில் லின் பியோ, மா சே துங், சூ டே, சூ என் லாய் – 1937



மாவோ (இடமிருந்து இரண்டாவது) போட்ரிக் ஹார்லே (வலமிருந்து மூன்றாவது) யுடன் யேனான் விமான தளத்தில். மாவோவுடன் பேசி உடன்படிக்கை காண அமெரிக்க அரசாங்கம் பேட்ரிக் ஹார்லேவை 1944 நவம்பரில் அனுப்பி வைத்தது.



தன்னுடைய மகள் லீ மின்னுடன் – 1951.



ஹாவோஷன் பள்ளி மாணவர் கள், ஆசிரியர்களுடன் –1959.



அமெரிக்க கல்வியாளரும் சமூக இயலாளருமான டபுள்யு இ.பி.தூ போயிஸ் மற்றும் அமெரிக்க முற்போக்கு எழுத்தாளரான அன்னா லூயி ஸ்ட்ராங்குடன் ஊஹானில் மாவோ –1959.



ஊஹானில் யாங்சி நதியில் நீந்திகொண்டிருக்கிறார் – 1961.



தேசிய தினத்தன்று தியானன்மென் சதுக்கத்தின் மேடையில் எட்கர் ஸ்நோ மற்றும் அவருடைய மனைவியுடன் மாவோ – **1970.**



நோபல் பரிசு பெற்ற சீன–அமெரிக்க இயற்பியலறிஞர் டாக்டர் சுங் தாவ் லி யுடன் மாவோ–**1974.**

# மாவோவின் இளமைக்காலம்

சீனநாட்டின் தெற்குப் பகுதியில் உள்ள மாநிலங்களில் ஒன்று ஹுனான் மாநிலம். எண்ணற்ற மலைகளையும், ஏராளமான ஆறுகளையும் கொண்டிருக்கக் கூடியதாக இந்த மாநிலம் அமைந்துள்ளது ஜியாங்டான் ஜியான் என்பது ஒரு மாவட்டம். இந்த மாவட்டத்தில் உள்ள ஷாவோஷான் என்ற கிராமத்தில் 1893-ம் ஆண்டில் மா—சே—துங் பிறந்தார்.

மா—சே—துங்கின் தந்தையார் பெயர் மாவோ ஷன்செங் என்பதாகும் தாயாரின் பெயர் வென்—குய்மெய் என்பதாகும்.

மாவோவின் தந்தையார் ஆரம்பத்தில் ஏழை விவசாயியாக இருந்தார். ஏராளமான கடன்கள் ஆகிவிட்டபடியால் ராணுவத்தில் போய்ச் சேர்ந்தார். பல வருடங்கள் ராணுவத்தில் சேவை செய்தபின் தன் கிராமத்துக்கு திரும்பி வந்தார். சிறுகச் சிறுக சேமித்த பணத்தைக் கொண்டு சிறு வியாபாரங்கள் செய்தார். அதன்மூலம், அவர் இழந்த நிலத்தை திரும்பப் பெற்றார். அவருடைய குடும்பமும் ஒரு நடுத்தர விவசாயக் குடும்பம் என்ற நிலையை அடைந்தது. வெகு விரைவிலேயே மேலும் அதிக நிலங்களை அவர் வாங்க முடிந்து ''பணக்கார விவசாயி'' என்ற நிலையை எட்டினார்.

மா-சே—துங்கிற்கு ஆறு வயதானபொழுது அவர் வயல் வேலைகளுக்கு அனுப்பப்பட்டார். அவர் மட்டுமல்ல, அவருடைய தாயும், தம்பியும்கூட வயல் வேலைக்கு அனுப்பப்பட்டனர். மா-வோவினுடைய

குடும்பத்தில் தாய், தந்தை, தாத்தா, தம்பி, மாவோ உட்பட ஐந்து பேர் இருந்தனர். சிறிதுகாலம் கழித்து அவருக்கு மற்றொரு தம்பி கிடைத்தான்.

கூடுதலான நிலத்தில் விவசாயம் செய்யப்பட்டதன் விளைவாக குடுமபத்தில் உபரி தானியம் குவியலாயிற்று. அவருடைய தந்தையார் அவற்றை பக்கத்து நகரங் களுக்கு அனுப்பி விற்பனை செய்தார். விவசாய வேலையைக் கவனிக்க ஒரு முழு நேர பண்ணை யாளையும் நியமித்தார். அத்துடன் அவர் ஏழை விவசாயிகளிடமிருந்து தானியங்களை விலைக்கு வாங்கி அவற்றை நகரத்திலுள்ள வியாபாரிகளுக்கு அதிக விலைக்கு விற்று வநதார்.

மாவோவிற்கு எட்டு வயதானபோது அந்த கிராமத் திலுள்ள ஆரம்பப் பள்ளியில் அவர் சேர்க்கப்பட்டார். அதிகாலையிலும் இரவிலும் மாவோ நிலத்தில் வேலை செய்யவேண்டும். பகலில் படிக்கவேண்டும். அவருடைய பள்ளிக்கூடத்து ஆசிரியர் மிகவும் கண்டிப்பானவர். மாணவர்களை தொடர்ந்து அடித்துக் கொண்டே யிருப்பார். இதன் காரணமாக மாவோவிற்கு பத்து வயதான சமயத்தில் அவர் கிராமத்தை விட்டு ஓடி விட்டார். வீட்டிற்குப் போனால் மேலும் அடிகிடைக்கும் என்ற காரணத்தால் வீட்டுக்கு வராமல் பக்கத்திலிருந்த நகரத்தின் திசைநோக்கி மாவோ ஓட்டமெடுத்தார். அது எங்கிருக்கிறது என்று அவருக்கு தெரியாத காரணத் தால் இங்கும் அங்கும் சுற்றிச்சுற்றி வந்து கொண்டிருந் தார். மூன்று நாட்களுக்குள் அவருடைய குடும்பத் தினர் அவரைக் கண்டுபிடித்து கிராமத்துக்கு கொண்டு வந்தனர். அடி கிடைக்கும் என்று பயந்துகொண்டிருந்த மாவோவிற்கு அவருடைய தந்தையார் சற்று இதமாக நடந்துகொண்டது வியப்பை அளித்தது. அதேபோல் அவருடைய ஆசிரியரும் சற்று நிதானமாக நடந்து கொண்டார். ''என்னுடைய எதிர்ப்பு நடவடிக்கையின்

விளைவு என்னை மிகவும் ஆகர்ஷித்தது. அது ஒரு வெற்றிகரமான வேலை நிறுத்தம்'' என்று பின்னாட்களில் ஒருமுறை மாவோ இதை நகைச்சுவையுடன் நினைவு கூர்ந்தார்.

மாவோவிற்கு எழுதப் படிக்கத் தெரிந்தவுடன் வீட்டுக் கணக்கு வழக்குகளையும் அவர் பார்க்க வேண்டுமென்று அவருடைய தந்தையார் கட்டளையிட்டார். இதன் காரணமாக கணக்கெழுதும் வேலையையும் இரவில் மாவோ, செய்ய வேண்டியிருந்தது. மாவோ வேலை ஏதும் இல்லாமல் உட்கார்ந்திருந்தால் உடனே வயலுக்குப் போய் வேலை செய்யும்படி தந்தையார் கட்டளையிடுவார். முன்கோபக்காரரான அவருடைய தந்தை மாவோவையும் அவருடைய தம்பியையும் பல நேரங்களில் கடுமையாக உதைத்ததுண்டு. பிள்ளைகளுக்கு சாதாரண உணவளித்ததைத் தவிர ஒரு பைசாக் காசுகூட அவர் கொடுத்ததில்லை. ஒவ்வொரு மாதமும் பதினைந்தாம் தேதியன்று அவருடைய கூலியாட்களுக்கு அவர் சலுகை அளிப்பார்; அவர்களுக்கு அரிசியும் முட்டைகளும் கொடுப்பார்; ஆனால் ஒருபோதும் இறைச்சி அளித்ததில்லை. மாவோவிற்கு முட்டையும் கொடுத்ததில்லை, இறைச்சியும் கொடுத்ததில்லை.

மாவோவின் தாயார் பெருந்தன்மையும் ஈவிரக்கமும் கொண்ட அன்பான பெண்மணி ஆவார். பஞ்ச காலங்களில் தங்களை நாடி வரும் ஏழைகளுக்கு அவர் அரிசியை தானமாகக் கொடுப்பதுண்டு. ஆனால் கணவர் வீட்டில் இருந்தால் அவர் தானம் செய்ய இயலாது. மாவோவின் தந்தைக்கு தர்மம் செய்வது என்பதே பிடிக்காது. இந்தப் பிரச்சனை காரணமாக வீட்டில் அடிக்கடி சச்சரவு எழுவதுண்டு.

குடும்பத்தில் மாவோவின் தந்தை ஆளும் சக்தியாகவும், மறுபுறத்தில் மாவோ, மாவோவின் தாய்,

மற்றும் தம்பி ஆகியோரும் சில சமயங்களில் வேலை யாட்களும் சேர்ந்துஎதிர்க்கட்சிபோலவும் இருப்பார்கள். மாவோவிற்கு வயது அதிகரிக்க அதிகரிக்க தந்தையுடன் நடத்தும் வாக்குவாதங்களும் அதிகரித்தன. மரியாதை யுடன் நடந்துகொள்வதில்லை என்றும், சோம்பேறி என்றும் தந்தையார் மாவோவை திட்டுவதுண்டு. அதற்கு மாவோ பதிலளிக்கையில், ''வயதானவர்கள் இளைஞர் களைவிட அதிக வேலை செய்யவேண்டும் என்றும் இளைஞர்களிடம் அன்புடனும் பிரியத்துடனும் அவர்கள் நடந்துகொள்ள வேண்டுமென்றும்'' புராணங்கள் கூறுவதை மாவோ சுட்டிக் காட்டுவதுண்டு. மாவோவின் தந்தையாரிடம் பணம் சேரச்சேர கிராமத்திலிருந்த மற்ற நிலங்களை ஒத்திக்கு வாங்க ஆரம்பித்தார். ஒரு சமயத்தில் அவருடைய கையிருப்பு மூவாயிரம் டாலர்கள் வரை இருந்தது.

வரவர மகனுக்கும், தந்தைக்குமிடையே வேறு-பாடுகள் அதிகரித்துக்கொண்டே வந்தன. மாவோ-விற்கு 13 வயதானபோது ஒருமுறை அவருடைய வீட்டிற்கு விருந்தினர்கள் வந்திருந்தனர். அவர்கள் முன்னிலையில் மாவோவிற்கும், அவருடைய தந்தைக்கு மிடையே வாக்குவாதம் வலுத்தது. இதனால் ஆத்திர மடைந்த தந்தையார், தன் மகன் சோம்பேறி என்றும், உதவாக்கரைப் பயல் என்றும் வசைபாடினார். இதனால் வெகுண்ட மாவோ தன்னுடைய தந்தையாரை ஆத்திரம் தீரும்மட்டும் சபித்துவிட்டு வீட்டைவிட்டு ஓடினார். இதைக்கண்ட மாவோவின் தாயார் மகனின் பின்னால் ஓடிவந்து ''ஓடாதே, ஓடாதே'' என்று கத்தினார். தந்தையாரும் மாவோவை சபித்துக் கொண்டே ''வீட்டுக்கு திரும்ப வா'' என்று கத்திக்கொண்டே ஓடி வந்தார். மாவோ ஒரு குளத்தின் விளிம்பில் போய் நின்றுகொண்டு தன்னை யாராவது பின் தொடர்ந்தால், தான் குளத்தில் குதித்துவிடப் போவதாக பயமுறுத் தினார்.

அதே நிலையிலேயே பேச்சு வார்த்தைகள் நடந்தன. கோரிக்கைகள், எதிர் — கோரிக்கைகள் வைக்கப்பட்டன. வீட்டிற்கு வரும்படி தந்தை அழைத்தார். வீட்டிற்கு வந்தால் தன்னை அடிக்கக் கூடாது என மாவோ கோரிக்கை வைத்தார். இருகால் மண்டியிட்டுபணிந்தால் அடிப்பதில்லை என தந்தையார் கூறினார். மாவோ, ஒருகால் மண்டியிட்டு பணிவதாக கூறினார். இறுதியில் இந்த 'யுத்தம்' முடிவுற்று மாவோ வீடு திரும்பினார். இதிலிருந்து மாவோ ஒரு முடிவுக்கு வந்தார். தான் வாய்மூடி மௌனியாக இருந்து பணிவாக நடந்துகொண்டால் தந்தை சாபமிடுகிறார். பலமாக அடிக்கிறார் என்பதையும் பகிரங்க கலகத்தின் மூலம் தன்னுடைய உரிமைகளைத்தான் நிலைநாட்டும் போது தந்தையார் இறங்கி வருவதையும் மாவோ புரிந்துகொண்டார். அதே நேரத்தில் தந்தையாருடைய நடவடிக்கைகள், மாவோவை அவருடைய வேலையில் மிகவும் முறையாகவும் கணக்கு வழக்குகளை கறாராக வும் வைத்திருக்கச் செய்தது.

மாவோவின் தந்தையார் இரண்டு வருடங்களே பள்ளிக்கு போனவர்; தாயாருக்கு எழுதப் படிக்கத் தெரியாது. எனவே மாவோதான் குடும்பத்தில் 'கற்றறிந்த நிபுணர்'. மாவோ புராணங்களையெல்லாம் படித்தவர்; ஆனால் அவற்றை அவர் ரசிக்கவில்லை. பழைய சீனத்தின் வீரதீரக் கதைகள், அதிலுங் குறிப்பாக கிளர்ச்சிக் கலகக் கதைகள் மாவோவிற்கு மிகவும் பிடிக்கும். ஆனால் அவருடைய பள்ளி ஆசிரியர் அவற்றை மிகவும் வெறுத்தார். மாணவர்கள் அவற்றைப் படிப்பதை அவர் விரும்பமாட்டார். எனவே மாவோ அத்தகைய புத்தகங்களை புராணப் புத்தகங் களுக்கு நடுவில் வைத்து படித்துக்கொண்டிருப்பார்.

அந்த 13 வயதான சமயத்திலேயே மாவோ ஆரம்பப் பள்ளியைவிட்டு விலகினார். நாள் முழுவதும் வயல்

வேலைகளில் ஈடுபட்டார். கூலி ஆட்களுக்குத்துணையாக அவர் வேலை செய்ய வேண்டி இருந்தது. இரவில் தந்தையாருக்காக கணக்கு வழக்கு பார்க்க வேண்டி யிருந்தது. இடையிடையே கிடைக்கும் நேரத்தில் புராணங்களைத் தவிர இதர புத்தகங்களையும் அவர் படித்து வந்தார். மகன் புராணங்களை மட்டுமே படிக்க வேண்டும், இதர புத்தகங்களைப் படிக்கக் கூடாது என தந்தையார் கருதினார். எனவே மாவோ நள்ளிரவில் தன்னுடைய அறையின் ஜன்னல்களில் பேப்பர் வைத்து மறைத்து தந்தைக்குத் தெரியாமல் புத்தகம் படிக்க ஆரம்பித்தார். இவ்வாறு அவர் ''எச்சரிக்கை தரும் வார்த்தைகள்'' (Words of Warning) என்ற நூலைப் படித்தார். சீனாவின் பலவீன மானது, ரயில்வேக்கள், தபால்தந்தி, தொலைபேசி மற்றும் நீராவிக் கப்பல்கள் போன்ற மேற்கத்திய நாடுகளின் சாதனங்களை பயன்படுத்தாத காரணத்தால் ஏற்பட்டுள்ளது என்றும் சீனாவில் அவை புகுத்தப்பட வேண்டும் என்றும் அந்த நூல் சுட்டிக்காட்டியது. இயற்கையாகவே, இந்த நூல் மாவோவை பெரிதும் கவர்ந்தது. மாவோ தொடர்ந்து ஏராளமான வீரதீரக் கதைகளையும் சீன இலக்கியத்தையும் படித்து வந்தார் என்றாலும் திடீரென்று ஒருநாள் அவருக்கு ஒரு விஷயம் புலப்பட்டது. இந்தப் புத்தகங்கள் அனைத்தும் வீரர்கள், அதிகாரிகள் அல்லது அறிஞர்கள் போன்றவர்களை சித்தரிக்கும் பாத்திரங்களையே கொண்டிருப்பதையும் நிலத்தை உழும் விவசாயிபற்றி ஒரு வார்த்தைகூட சொல்லாததும் அவருக்கு வினோதமாயிருந்தது. ஒரு புத்தகத்தில்கூட ஒரு விவசாயி கதாநாயகனாக சித்தரிக் கப்படாதது ஏன் என்ற கேள்வி அவர் மனதில் எழுந்தது. இது குறித்து இரண்டு வருடங்கள் சிந்தித்த பிறகு, இத்தகைய கதைகளின் உள்ளடக்கத்தை ஆராய்ந்த பிறகு ஒரு விஷயம் அவருக்குப் புலப்பட்டது. புகழாரம் சூட்டப்பட்ட வீரர்களும், மக்களை ஆட்சி புரிந்து வந்த

ஆட்சியாளர்களும் நிலத்தை தங்கள் சொத்தாக வைத்திருந்து அதை தங்கள் கட்டுப்பாட்டின்கீழ் வைத்திருந்ததால், அவர்கள் வயலில் இறங்கி வேலை செய்யவில்லை என்பதையும், தங்களுக்காக விவசாயி களை வேலைசெய்ய வைத்தனர் என்பதையும் மாவோ புரிந்துகொண்டார். இது அவருடைய சிந்தனைப் போக்கின் திருப்பத்திற்கான துவக்கமாக அமைந்தது.

மாவோவிற்கு 14 வயதாக இருந்த போது' அவருடைய தந்தையார், 20 வயதுள்ள ஒரு பெண்ணை அவருக்கு மணமுடித்து வைத்தார். அது வெறும் திருமண நிகழ்ச்சியோடு முடிந்து விட்டது. மாவோ அந்தப் பெண்ணுடன் ஒரு நாள்கூட வாழ்ந்ததில்லை.

மாவோவின் தந்தைக்கு ஆரம்பத்தில் தெய்வபக்தி கிடையாது. ஆனால் மாவோவின் தாயார், புத்தரை தினமும் தொழுவார். தன்னுடைய பிள்ளைகளையும் தெய்வபக்தி உடையவராக்கினார். மாவோவும், அவருடைய தாயாரும் சேர்ந்து அவருடைய தந்தையை பக்தி மானாக்குவதற்காக பெரு முயற்சி செய்தனர். ஆனால் அதற்காக அவருடைய தந்தையிடம் வசவு வாங்கிக் கட்டிக்கொண்டதுதான் மிச்சம். காலப்போக்கில் பல்வேறு புத்தகங்களைப் படித்து மாவோ கடவுள் மீதான நம்பிக்கையை இழக்கத் தொடங்கினார்.

இந்த நேரத்தில் ஒரு சம்பவம் நடந்தது. ஒருநாள் மாவோவின் தந்தையார், தனக்கு வரவேண்டிய பணத்தைப் பெறுவதற்காக காட்டு வழியே போய்க் கொண்டிருந்தபோது வழியில் ஒரு புலியைப் பார்த்து விட்டார். புலியும் இவரைப் பார்த்துவிட்டு ஓடி விட்டது. தான் தெய்வாதீனமாகத் தப்பியிருக்கிறோம் என்று அவர் கருத ஆரம்பித்தார், அதிலிருந்து அவர் புத்தரைத் தொழ ஆரம்பித்தார். சாம்பிராணி தூபமும்

போட ஆரம்பித்தார். கஷ்டங்கள் ஏற்படும்பொழுதெல்லாம் கடவுளைத் தொழ ஆரம்பித்தார். கடவுள் நம்பிக்கை இழக்கத் தொடங்கியதற்காக மாவோவை அவரது தாயார் கண்டிப்பார். ஆனால் தகப்பனார் எதுவும் கூறுவதில்லை.

''எச்சரிக்கை தரும் வார்த்தைகள்'' என்ற நூலைப் படித்ததிலிருந்து தனது பள்ளிப் படிப்பைத் தொடர வேண்டுமென்ற அவா மாவோவுக்கு ஏற்பட்டது. வயல் உழைப்பில் அசிரத்தை ஏற்பட்டது. இது தந்தைக்குப் பிடிக்கவில்லை. இருவருக்குமிடையே பலத்த வாக்கு வாதம் ஏற்பட்டது. இறுதியாக ஒருநாள் மீண்டும் மாவோ வீட்டைவிட்டு ஓடினார். சட்டம் படித்து வேலையில்லாமல் இருந்த தன் நண்பர் ஒருவர் வீட்டுக்குச் சென்று அங்கிருந்துகொண்டு ஆறு மாதம் படித்தார். அதன்பின் ஒரு மூத்த சீன அறிஞரிடம் கற்றதோடு தற்காலத்திய கட்டுரைகளையும் ஒரு சில புத்தகங்களையும் படித்தார்.

## அரசியல் பிரவேசம்

இந்த சமயத்தில் ஹூனான் நகரில் நடைபெற்ற ஒரு சம்பவம் மாவோவின் வாழ்கையில் அவரை மிகவும் ஆகர்ஷித்த சம்பவமாக அமைந்தது. ஒருநாள் அவரும் அவருடைய சகமாணவர்களும் தங்களுடைய சிறிய சீனப் பள்ளிக்கூடத்து வாசலில் நின்று கொண்டிருக்கையில் ஏராளமான தானிய வியாபாரிகள் சங்ஷா (Changha) நகரிலிருந்து திரும்பி வந்து கொண்டிருப்பதைக் கண்டனர். ஏன், கூட்டமாக திரும்பி வந்து கொண்டிருக்கின்றீர்கள் என்று இளம் மாவோ கேட்டபோது அவர்கள் பெரும் கதையையே கூறினர். அந்த வருடத்தில் கடுமையான பஞ்சம் ஏற்பட்டதால் சங்ஷாவில்

ஆயிரக்கணக்கானோருக்கு உணவு கிடைக்கவில்லை. பட்டினி கிடந்த மக்கள் நகர ஆளுநரிடம் ஒரு தூதுக் குழுவை அனுப்பி உணவுப் பொருள் கேட்டனர். ஆனால் அந்த ஆளுநரோ ''எனக்கு ஏராளமான உணவு கிடைக்கிறதே, நகரத்துக்குப் போய் பாருங்கள் ஏராளமாக கிடைக்கும்'' என்று திமிரோடு கூறி தூது குழுவை திருப்பி அனுப்பினான். பட்டினி கிடந்த மக்கள் கொதித்தெழுந்தனர். அவர்கள் பெரும் கூட்டங்களை நடத்தினர், ஆர்ப்பாட்டங்களை நடத்தினர். மஞ்சு வமிச ராஜாக்களின் இலச்சினையை உடைத்தெறிந்தனர். அரசாங்கக் கொடிக் கம்பத்தை வெட்டி வீழ்த்தினர் என்பதுடன் ஆளுநரையும் விரட்டியடித்தனர். இதன்பின் ஜீவாங் என்ற பெயர்கொண்ட உள்துறை கமிஷனர் தன்னுடைய குதிரையில் ஏறி வந்தான். அரசாங்கம் மக்களுக்கு உதவி செய்யும் என்று வாக்குறுதி அளித்தான். அந்த நபர் உண்மையில் ஏதாவது செய்யவேண்டுமென்று விரும்பினான். ஆனால் பேரரசனுக்கு அவனைப் பிடிக்கவில்லை, அந்த அதிகாரியும் கலகக் கும்பலோடு நெருக்கமான தொடர்பு கொண்டிருக்கின்றான் என்ற குற்றச்சாட்டைக் கூறி அந்தக் கமிஷனரை பதவியிலிருந்து அகற்றினான். புதிய ஆளுநர் அனுப்பப்பட்டான். அவன் வந்ததும் எழுச்சிக்கு தலைமை தாங்கிய சக்திகளை கைது செய்யும்படி உத்தரவிட்டான். அவர்களில் பலரை சிரச்சேதம் செய்து, அவர்களுடைய தலைகளை, எதிர்கால கலகக்காரர்களை எச்சரிக்கும் பொருட்டு மரக் குச்சிகளில் குத்தி வைத்தான்.

இந்த தகவல்களைக் கேள்விப்பட்ட மாவோவும் இதரமாணவர்களும் பல நாட்கள் அது குறித்து விவாதித்தனர். எழுச்சிக்காரர்கள் குறித்து வெறும் பார்வையாளர் என்ற நிலையிலிருந்து பல மாணவர்கள் தங்கள் பச்சாதாப உணர்வை வெளிப்படுத்தினர். ஆனால் அது தங்களுடைய வாழ்க்கையுடன் தொடர்பு கொண்டிருக்

கிறது. என்று அவர்கள் கருதவில்லை. ஆனால் மாவோ வேறு விதமாக கருதினார். அந்த கிளர்ச்சிக்காரரர்கள் தங்களுடைய சொந்தக் குடும்பத்தினரைப் போன்று சாதாரண மக்களே என்றும் அவர்களுக்கு இழைக்கப் பட்டுள்ளது மாபெரும் அநீதி என்றும் கருதினார்.

ஷாவோ ஷானில் நடைபெற்ற மற்றொரு நிகழ்ச்சி யும் மாவோவின் கவனத்தைப் பெரிதும் ஈர்த்தது. அப் பகுதி நிலப்பிரபு ஒருவருக்கும் ரகசிய அமைப்பு ஒன்றைச் சேர்ந்த உறுப்பினர்களுக்குமிடையே ஏற்பட்ட தகராறில் அந்த நிலப்பிரபு நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந் தான். நீதிமன்றத்தின் தீர்ப்பு தமக்கு சாதகமாக இருக்கும்படி ஏற்பாடு செய்தான். ஆனால், தோற் கடிக்கப்பட்ட உறுப்பினர்கள் அரசாங்கத்திற்கு எதிராக வும், நிலப்பிரபுவுக்கு எதிராகவும் கலகத்தில் இறங்கினார்கள். லியுசான் என்ற பகுதியிலிருந்த மலையில் ஏறிச் சென்று தங்களுக்கு ஒரு புகலிடத்தை உருவாக்கிக் கொண்டார்கள். பாங் (Pang) என்ற பெயருடைய ஆட்டுக்கல் தயாரிப்பவர் இந்த கலகக் காரர்களின் தலைவராக விளங்கினார். இவர்களை ஒடுக்குவதற்காக அரசாங்கப் படைகள் அனுப்பப்பட்டன இறுதியில் அவர்கள் ஒடுக்கப்பட்டனர் பாங் அந்த இடத்தைவிட்டு ஓடினார் என்றாலும் கடைசியில் பிடி பட்டு சிரச்சேதம் செய்யப்பட்டார்.

மாவோ உள்ளிட்டு மாணவர்கள் அனைவரின் கண் களில், பாங் ஒரு கதாநாயகராகவே விளங்கினார் அவர் களின் அனுதாபம் முழுவதும் அந்த கிளர்ச்சியாளர் களுக்கு ஆதரவாகவே இருந்தது.

அடுத்த வருடத்தில் மாவோவின் மாவட்டத்தில் உணவுத் தட்டுப்பாடு ஏற்பட்ட பொழுது, பணக்கார விவசாயிகள் தங்களுக்கு உதவவேண்டுமென்று ஏழை எளிய மக்கள் கோரினர்; ''காசு கொடுக்காமல் சோறு சாப்பிடு'' (Eat Rice without Change) என்ற இயக்கத்தை நடத்தினர். மாவோவின்தந்தையார்

கிராமத்தில் பற்றாக்குறை இருந்தபோதும் நகரத்திற்கு விற்பனைக்காக அரிசியை அனுப்பிவந்தார். அவ்வாறுஅனுப்பப்பட்ட தானிய மூட்டைகள் பலவற்றை வழியிலிருந்த ஏழை எளிய மக்கள் கைப்பற்றினர். தந்தையார் அடைந்த கோபத்திற்கும், ஆத்திரத்திற்கும் அளவேயில்லை. மாவோ தன் தந்தையாரைப் போன்று ஆத்திரப்படவில்லை. ஆனால் கிராம மக்களின் முறையும் சரியானதல்ல என்று கருதினார்.

இந்த சமயத்தில் மாவோவைக் கவர்ந்த மற்றொருவர். ஸ்தல ஆரம்பப் பள்ளியிலிருந்த தீவிர மனோபாவங் கொண்டிருந்த ஆசிரியர் ஒருவராவார். அவர் புத்த மதத்தை எதிர்த்தார்; கடவுள்களை ஒழித்துக்கட்ட வேண்டுமென்று கூறினார்; மக்கள் தங்களுடைய ஆலயங்களைப் பள்ளிகளாக மாற்ற வேண்டுமென்று வலியுறுத்தினார். அவரைக் குறித்து அனைவரும் விவாதித்தார்கள். மாவோவும் அந்த ஆசிரியரை மிகவும் போற்றினார் என்பதுடன் அவருடைய கருத்தோட்டத்துடன் உடன்பட்டார்.

இத்தகைய நிகழ்ச்சிப் போக்குகள் அனைத்தும் சேர்ந்து, ஏற்கனவேயே கிளர்ந்தெழுந்து வந்த மாவோ வின் சிந்தனைப் போக்கு மீது மீண்டும் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது.

''சீனா துண்டாடப்படும்'' என்ற பிரசுரம் ஒன்றைப் படிக்கும் வாய்ப்பு மாவோவுக்கு கிடைத்தது. ''அந்தோ! சீனா அடிமைப்படுத்தப்பட போகிறது'' என்ற வாக்கியத்துடன் தொடங்கிய அந்தப் புத்தகம் கொரியாவையும்' பார்மோஸாவையும் ஜப்பான் கைப்பற்றியிருப்பதையும், பர்மா மற்றும் இந்தோ சீனா வில் ஆதிபத்திய உரிமைகள் இழக்கப்பட்டிருப்பதையும் சுட்டிக் காட்டியதுடன் சீனாவுக்கும் அந்த நிலைமை ஏற்படலாமென்று கூறியது. இதைப் படித்தபின்

தன்னுடைய நாட்டின் எதிர்காலம் எவ்வாறு இருக்கப் போகிறதோ என்ற கவலை மாவோவிற்கு ஏற்பட்டது. அதைக்காப்பாற்றவேண்டியது நாட்டுமக்கள்அனைவரின் கடமை என்று அவர் உணர ஆரம்பித்தார்.

மாவோ படிப்படியாக அரசியல் உணர்வு பெற ஆரம்பித்தார்; அதிலும் குறிப்பாக, மேலே குறிப்பிட்ட புத்தகத்தைப் படித்தபின் அந்த உணர்வு வேகம் அதிகரித்தது.

மாவோவின் தந்தையார் தன் மகனை ஜியாங்டன் நகரிலிருந்த அரிசிக் கடையில் சேர்த்துவிட்டு அங்கே பயிற்சி கிடைக்கச் செய்யவேண்டுமென்று நினைத்தார், அந்தக் கடையோடு அவருக்கு தொடர்பிருந்தது. இந்த யோசனையை முதலில் மாவோவும் எதிர்க்கவில்லை. ஆனால் ஜியாங் ஜியாங் ஜியான் என்ற இடத்தில் ஒரு புது மாதிரியான பள்ளிக்கூடம் செயல்படுவதாகவும் அங்கே நவீன கல்வி போதிக்கப்படுவதாகவும் மாவோவிற்கு தகவல் கிடைத்தது, அங்கே இதிகாசங்கள் கற்றுக் கொடுப்பது குறைவாகவும், மேற்கத்திய நாடுகளின் 'புதிய அறிவு முறை' அதிகமாகக் கற்றுக் கொடுக்கப் படுவதாகவும் மாவோ அறிந்தார். எனவே அந்தப் பள்ளியில் போய்ச் சேர அவர் விரும்பினார். அவருடைய தந்தையார் அதை எதிர்த்தார். ஆனால் அவருடைய நண்பர்கள் மாவோவிற்கு ஆதரவாக பரிந்து பேசினர். மாவோ அந்தப் பள்ளியில் சேர்ந்து வளர்ச்சியடைந்து வரும் கல்வியைப் பெற முடிந்தால்,எதிர்காலத்தில் அவர் கைநிறைய சம்பாதிக்க முடியும் என்று அந்த நண்பர்கள் கூறியதால் மாவோவின் தந்தையார் மகனை அந்தப் பள்ளிக்கு அனுப்பிவைத்தார்.அச்சமயத்தில்மாவோவிற்கு 16 வயது.

மாவோ அந்தப் பள்ளியில் இயற்கை விஞ்ஞானங் களைக் குறித்தும், மேற்கத்திய விஞ்ஞான வளர்ச்சி,

நாகரீக வளர்ச்சி குறித்தும் பாடல்களைக் கற்றார். படிப்பில் சிறந்து விளங்கியதால் ஆசிரியர்களின் மதிப்புக்கு ஆளானார்.

பூகோளம், வரலாறு, சீன மன்னர் பரம்பரை போன்றவை குறித்து பல நூல்களை மாவோ படித்தார். அமெரிக்கப் புரட்சியை குறித்த ஒரு கட்டுரையைப் படித்த பொழுதுதான் அவருக்கு அமெரிக்கா என்ற நாட்டைக் குறித்து முதல் தடவையாக அறிந்துகொள்ள முடிந்தது. ''உலகின் மகத்தான கதாநாயகர்கள்'' (Great Heroes of the world) என்ற நூலைப் படித்து நெப்போலியன், ரஷ்யாவின் காதரைன், மகா சக்கர வர்த்தி பீட்டர், வெல்லிங்டன், கிளாட் ஸ்டோன், ரூஸோ, மாண்டெஸ்க், ஆபிரகாம் லிங்கன், போன்றோரின் வாழ்க்கை வரலாற்றை தெரிந்து கொண்டார்.

சிறிது காலம்கழித்து, சாங்ஷா நகரிலிருந்த நடுத்தரப் பள்ளியொன்றில் மாவோ சேர்ந்தார். அங்கிருந்த பொழுது ''மக்கள் வலிமை'' (Peoples Strength) என்ற செய்தித்தாளை படிக்கும் வாய்ப்பு மாவோவிற்கு கிடைத்தது. இதுதான் அவர் படித்த முதல் செய்தித் தாள். இது தேசீயவாத புரட்சிகர பத்திரிகையாகும். இதில், மஞ்சு மன்னர் பரம்பரைக்கெதிராக குவாங்ஸீ (Guangzhou) என்ற இடத்தில் நடைபெற்ற எழுச்சியும், அதில் 72 புரட்சியாளர்கள் கொல்லப்பட்டதுமான செய்தி வெளியாகியிருந்தது. இது மாவோவை மிகவும் ஆகர்ஷித்தது. அதேபோல் சன்யாட்சென் குறித்தும், அவருடைய திட்டம் குறித்தும் மாவோ படித்தறிந்தார். சீன நாடு முதல் புரட்சி நடைபெறும் தருவாயிலிருந்தது.

# மன்னனுக்கும், அன்னியனுக்கும் எதிராக ...

பல நூற்றாண்டுகளாக மஞ்சு அரச பரம்பரையின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த சீனா, பல ஏகாதிபத்திய நாடுகளின் சுரண்டல் காடாக விளங்கியது. பிரிட்டன், பிரான்ஸ், ரஷ்யா, ஜப்பான், ஜெர்மனி முதலிய நாடுகள் சீனாவின் பல பகுதிகளில் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்தி வந்தன. அவைகளின் பிடியில் இருந்த பகுதி களுக்கு 'சலுகை பகுதிகள்' (Concessions) என்றுபெயர். அந்தப் பகுதிகளில் அந்தந்த நாடுகள் தங்களுடைய ராணுவத்தை வைத்திருந்தன.

சீனாவின் ரயில் போக்குவரத்து, தபால் போக்கு வரத்து போன்றவைகள்கூட அன்னியநாட்டுக் கம்பெனி களால் நடத்தப்பட்டு வந்தது.

அன்னியரான மஞ்சு வம்சத்தினரின் ஆட்சியில் தங்கள் நாடு சீரழிந்து வருகின்றது என்பதை உணர்ந்த சீன மக்கள், குறிப்பாக சீன இளைஞர்கள் கொந்தளித் தெழ ஆரம்பித்தனர். பல ரகசியச் சங்ககங்கள் உருவாக ஆரம்பித்தன. சீனாவை, அன்னியர்களின் பிடியிலிருந்து, மஞ்சு மன்னராட்சியின் பிடியிலிருந்து விடுவிக்கவேண்டும் என்ற சுதந்திரவேட்கை அந்த இளைஞர்கள் மனதில் உருவாக ஆரம்பித்தது.

இத்தகைய இளைஞர்களில் பிரபலமானவர் டாக்டர் சன்யாட்சென். இவர் 1905-ம் ஆண்டில் டுங்மெங் ஹுயி (புரட்சிக்கழகம்) என்ற அமைப்பை ஏற்படுத்தி இளைஞர்களை ஈர்த்தார். விரைவில் இந்த அமைப்பிற்கு சீனா முழுவதும் கிளைகள் தோன்றின.

மக்கள் கொந்தளிப்பின் விளைவாக 1909-ம் ஆண்டு சீனாவின் மாநிலங்கள்தோறும் சட்டமன்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. இவைகளுக்கு அதிகாரம் எதுவும் கிடையாது. இவைகளில் பிரசங்கங்கள் மட்டும்தான் நிகழ்த்த முடியும்.

டுங்மெங் ஹுயி என்ற அமைப்பு விரைவில் கோமிண்டாங் கட்சியானது.

"1911-ம் வருடம் அக்டோபர் மாதத்தில் ஹாங்கோ என்ற இடத்தில் ஒரு கிளர்ச்சி தொடங்கியது. விரைவில் இது காட்டுத் தீ போல் பரவி ஐம்பது நாட்களுக்குள் 14 மாநிலங்களில் பரவியது. மஞ்சு மன்னனின் படைகளும், அதிகாரிகளும் ஓட்டமெடுக்கத் தொடங்கினர்.

இந்த எழுச்சியிலே ஈடுபட்ட பல மாநிலப் பிரதிநிதிகள் நான்கிங் என்ற நகரில் ஒன்று கூடி சீனா ஒரு குடியரசு என்ற பிரகடனம் செய்தனர். ஒரு தற்காலிக அரசாங்கத்தை நிறுவி டாக்டர் சன்யாட் சென்னை தற்காலிக குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். இவ்வாறு 1912-ம் வருடம் ஜனவரி மாதம் முதல் தேதியன்று குடியரசு மலர்ந்தது.

இந்தக் கிளர்ச்சி ஆரம்பித்த உடனேயே மஞ்சு மன்னன், அதை ஒடுக்குவதற்காக, தன் சேனாதிபதி யுவான் ஷி காய் என்பவனை ஏவிவிட்டான். இந்த சேனாதிபதிக்கு அரச பதவியை தான் பிடித்துக்கொள்ள வேண்டுமென்ற ஆசை இருந்தது. அதை மனதில் வைத்து, சன்யாட்சென்னுக்கு ஒரு தந்தி அனுப்பினான். குடியரசு முறையைதான் ஆதரிப்பதாகவும் நான்கிங் அரசாங்கத்தோடு ஒத்துழைக்க தயாரென்றும் அவன் கூறினான். மஞ்சு ஆட்சியை வீழ்த்தி குடியரசை வலுப்படுத்த வேண்டுமென்று கருதிய சன்யாட்சென், இந்த படைத் தளபதி கூறியதை ஏற்றுக்கொண்டு, இந்த

லட்சியத்தை நிறைவேற்ற அவன் தயாராயிருந்தால் குடியரசுத் தலைவர் பதவியைதான் ராஜினாமா செய்து விடுவதாகவும், யுவான் ஷி காயை தலைவராக்குவ தாகவும் தெரிவித்தார். அவனும் அதன்படி நடப்பதாக வாக்குறுதி அளித்தான்.

மஞ்சு மன்னன் 1912-ம் ஆண்டு பிப்ரவரி 12ந்தேதி முடி துறந்தான். யுவான் ஷி காய் மார்ச் 10-ந் தேதி குடியரசுத் தலைவராக பதவியேற்றான்.

அதிகாரத்திற்கு வந்த யுவான் ஷி காய், ஏற்கனவே கொடுத்த வாக்குறுதிகளை மீறினான். புதிதாக உருவாக்கப்பட்ட நாடாளுமன்றத்தில் கோமிண்டாங் கட்சிக்கு பெரும்பான்மை கிடைத்தது. அது, நாடாளு மன்றத்தின் ஒப்புதலோடுதான் சட்டம் அமுலாக்கப்பட வேண்டுமென்று கூறியதுடன், குடியரசுத் தலைவருடைய அதிகாரத்தையும் வரையறுக்க வேண்டுமென்றும் கூறியது.

இதைக்கண்ட யுவாங் ஷி காய் ஆத்திரமடைந்தான். பல கொலைகளைச் செய்தான். கோமிண்டாங் கட்சியை தடை செய்தான். நாடாளுமன்றத்தைக் கலைத்துவிட்டு சர்வாதிகாரியானான. சன்யாட் சென் ஜப்பானுக்கு தப்பிச் சென்றார், அங்கிருந்து கொண்டு கோமிண்டாங் கட்சியை நடத்தி வந்தார்.

இந்த நிலைமைகளால் கிளர்ந்தெழச் செய்யப்பட்ட மாவோ, ஒரு கட்டுரையை எழுதி அதை பள்ளிக்கூட சுவரில் ஒட்டினார். அதில் சன்யாட்சென், ஜப்பானி லிருந்து திருப்பியழைக்கப்பட்டு புதிய சீனஅரசாங்கத்தின் தலைவராக பதவியேற்கும்படி செய்யப்படவேண்டும் என்று மாவோ கோரியிருந்தார். மாவோ கொண்டிருந்த அரசியல் கருத்தின் முதல் வெளிப்பாடு இதுதான்!

சிசுவான்— ஹான்கோ (Sichuan Hankou) ஊர்களுக் கிடையே உருவாக்கப்படவிருந்த ரயில் போக்குவரத்து

சம்பந்தமாக அன்னிய மூலதன எதிர்ப்பு இயக்கமும் சீனத்திற்கு நாடாளுமன்றம் தேவை என்ற வெகுஜன கோரிக்கையும் மிகவும் வலுத்துவந்தன. சீனப் பேரரசன் இதை ஏற்காமல் வெறும் ஆலோசனைக் குழு ஒன்றை மட்டும் உருவாக்குவதாக அறிவித்தான். இதைக் கேள்விப்பட்ட மாவோவின் பள்ளி மாணவர்கள் கிளர்ந்தெழுந்தனர். தங்களுடைய சடைகளைச் சுருட்டிக் கொண்டை போட்டுக்கொள்வதன் மூலம் மஞ்சு மன்னராட்சிக்கெதிரான தங்களுடைய உணர்வுகளை வெளிப்படுத்தினர். மாவோவும் அவருடைய நண்பர்கள் சிலரும் அவ்வாறே செய்தனர்.

எதிர்ப்புத் தெரிவிப்பதற்காக மாணவர்கள், இவ்வாறு சடையைச் சுருட்டிக் கொண்டை போட்டுக் கொண்டதற்கு ஒரு வரலாற்றுப் பின்னணி உண்டு.

பண்டைக் காலத்தில் சீன ஆண்கள் தங்கள் தலை முடியைச் சுருட்டிக் கொண்டையாகப் போட்டுக் கொள்வது வழக்கம். ஆனால் மங்கோலிய இனத்தவர்கள் சீனாவைப் பிடித்தவுடன் ஒரு புதிய உத்தரவை இட்டனர். சீனர்கள் தங்களுக்கு அடிமைப்பட்டவர்கள் என்று குறிக்கும் விதத்தில் சீன ஆண்கள், முன் தலையை மொட்டையாக வைத்து, பின் தலையில் இரட்டைப் பின்னல் போட்டுக்கொள்ள வேண்டுமென்று உத்தரவிட்டனர்.

மங்கோலியர்கள் ஆட்சி முடிந்து மிங் வம்ச ஆட்சி தொடங்கியதும் சீன ஆண்கள் மீண்டும் கொண்டை போட்டுக்கொண்டனர். மிங் ஆட்சியானது சீனர்கள் ஆட்சியாக இருந்ததால் இது சாத்தியமாயிற்று.

ஆனால் மிங் ஆட்சிக்குப் பிறகு சீனர் அல்லாதவரான மஞ்சு வம்ச ஆட்சி தொடங்கியதும் புதிய உத்தரவு

பிறப்பிக்கப்பட்டது. சீன ஆண்கள் கொண்டை, இரட்டைப் பின்னல் போடக் கூடாது; ஒற்றைப் பின்னலாகப் பின்னித்தொங்கவிட்டுக்கொள்ள வேண்டுமென்று உத்தரவு பிறப்பிக்கப்படது. அப்படிச் செய்யவில்லையென்றால் மரண தண்டனை விதிக்கப்படுமென்று அறிவிக்கப்பட்டது.

சீன மக்கள் கொந்தளித்து எழுந்தார்கள். பல இடங்களில் மஞ்சு மன்னர்களின் படைகளுக்கும் விவசாயிகளுக்குமிடையே ஆயுத மோதல் ஏற்பட்டது. பலர் கொல்லப்பட்டனர்.

சியாடிங் என்ற நகர மக்கள் அரசாங்க உத்தரவுக்கு கீழ்ப்படிய மறுத்தனர். அரசாங்கப் படைகள் எண்பது நாட்கள் அந்த நகரத்தை முற்றுகையிட்டன. நகர மக்கள் கடைசியில் சரணடைந்தார்கள். சுமார் 1 லட்சத்து 75 ஆயிரம் மக்கள் கொல்லப்பட்டனர்.

இந்தப் படுகொலைக்குப் பின்னர் சீன ஆண்கள் கட்டாயமாக ஒற்றைப் பின்னல் சடை போடவேண்டியிருந்தது. தங்களுக்கு இழைக்கப்பட்ட அவமானத்தை மனக் குமுறலோடு அவர்கள் தலைமுறை தலைமுறையாகத் தாங்கிவந்தனர். புதிய சூழ்நிலைமைகளின் கீழ் அந்தக் குமுறல் இப்பொழுது வெடிக்கத் தொடங்கிவிட்டது!

ஹுனானில் லீ யுவான் ஹாங் என்பவரின் தலைமையில் ஏற்பட்ட எழுச்சிக்குப் பின் அங்கே ராணுவச்சட்டம் பிறப்பிக்கப்பட்டது. அரசியல் நிலைமையில் துரித மாற்றம் ஏற்படத் தொடங்கியது. மாவோ படித்து வந்த பள்ளிக்கு ஒரு புரட்சியாளர் ஒருநாள் வருகை தந்தார். முதல்வரின் அனுமதியுடன், மாணவர்களிடையே உணர்ச்சிப் பெருக்கெடுத்தோடும் உரை ஒன்றை அவர் நிகழ்த்தினார். அதைக் கேட்டு ஏழெட்டு

மாணவர்கள் கூட்டத்திலிருந்து எழுந்திருந்து மஞ்சு மன்னராட்சிக்கெதிராகக் கண்டனம் முழங்கி அந்தப் பேச்சாளரை ஆதரித்தனர். குடியரசு வேண்டுமென்று அவர்கள் கோரினர்.

இந்தப் பேருரையைக் கேட்ட நான்கைந்து நாட்களுக்குள் லீ யுவான் ஹாங்கினுடைய புரட்சிகர ராணுவத்தில் சேருவதென்று மாவோ உறுதி பூண்டார்.

சங்ஷா நகருக்கு வெளியே கிளர்ச்சியாளர்களுக்கும், அரசாங்கத் துருப்புகளுக்குமிடையே பெரும் மோதல் ஏற்பட்டது. அதே சமயத்தில் நகருககுள்ளும் ஒரு எழுச்சி உருவாயிற்று. நகரத்தின் வாயிற்கதவுகள் சீனத் தொழிலாளர்களால் உடைத்தெறியப்பட்டன. மாவோ உடைக்கப்பட்ட ஒரு கதவு வழியாக உள்ளே சென்று அங்கே நடைபெற்று வந்த நிகழ்ச்சிகளைக் கண்டார். சீனக் கொடி (Han Flag) உயர்த்தப்பட்டது சீன எழுத்துகள் பொறிக்கப்பட்ட வெள்ளைக் கொடியாகும் அது. இவற்றையெல்லாம் கண்ட பின் பள்ளிக்குத் திரும்பிய மாவோவுக்கு ஓர் அதிர்ச்சி காத்திருந்தது. அவருடைய பள்ளிக்கூடத்தை ராணுவம் சூழ்ந்திருந்தது.

அடுத்த நாள், அங்கே ஆளுநர் ஆட்சி ஏற்படுத்தப் பட்டது. அவருக்கு உதவியாக உதவி ஆளுநர் இருந்தார். மாநில ஆலோசனைக் கவுன்சில் என்பது அகற்றப்பட்டு, அது இருந்த இடத்தில் ஆளுநர் அலுவலகம் செயல் பட்டது. இவர்கள் இருவரும் ஏழைகள் என்பதோடு அடித்தட்டு மக்களின் நலன்களைப் பிரதிபலித்தனர். இதனால் அதிருப்தியடைந்த நிலப்பிரபுக்களும், வர்த்தகர்களும் திட்டமிட்டு, சில நாட்களுக்குப் பின் இவ்விருவரையும் கொலைசெய்து அவர்களது உடல்களைத் தெருவில் வீசி எறிந்தனர்.

இச்சமயத்தில் மாணவர்கள் பலர் ராணுவத்தில் சேர்ந்தனர். மாணவர் ராணுவம் ஒன்று ஏறபடுத்தப்

பட்டது. மாவோ அதில் சேரவில்லை. அவர் நிரந்தர ராணுவத்தில் சேர்ந்தார்.

மாவோவிற்கு மாதச் சம்பளமாக மாதமொன்றுக்கு 7 டாலர் கிடைத்தது. அதில், உணவுக்காகவும், தண்ணீருக்காவும் அவர் 2 டாலர் செலவிட்டார். மீதமுள்ள பணத்தில், கிடைத்த பத்திரிகைகளையெல்லாம் வாங்கினார். ''ஸியாங்ஜியாங் தினசரி செய்தி'' என்ற பத்திரிகை புரட்சி குறித்து எழுதியது. சோசலிசம் குறித்து அதில் விவாதிக்கப்பட்டது. சோசலிசம் என்ற வார்த்தையை முதன் முதலாக இந்தப் பத்திரிகையில் மாவோ படித்தார். ஜியாங் கெங்கூ என்பவர் சோசலிசம் குறித்தும் அதனுடைய கோட்பாடுகள் குறித்தும் எழுதிய பிரசுரங்களைப் படிக்கும் வாய்ப்பு மாவோவிற்குக் கிடைத்தது. ஆறு மாத காலத்திற்குப் பின் மாவோ, ராணுவத்திலிருந்து ராஜிநாமா செய்து மீண்டும் படிக்கத் தொடங்கினார்.

எத்தகைய கல்வியைக் கற்கவேண்டும் என்பதுகுறித்து மாவோ முடிவு செய்ய முடியாத நிலையில் இருந்தார். அச்சமயத்தில் பல்வேறு வகைப்பட்ட பள்ளிகள் உருவாக்கப்பட்டு, மாணவர்களை ஈர்ப்பதற்காக பத்திரிகைகளில் பெரும் விளம்பரங்களைச் செய்திருந்தன. 'மாணவர்கள் தேவை' என்று போலீஸ் பள்ளிக்கூடம் ஒன்று விளம்பரம் செய்திருந்தது. அதைப் படித்த அதில் தன்னைப் பதிவு செய்துகொள்ளக் கட்டணம் அனுப்பினார்.

அந்தப் பள்ளி நேர்முகத் தேர்வுக்கு அழைக்கும் முன்னர் மாவோ மற்றொரு விளம்பரத்தைப் படித்தார். அது சோப்பு தயாரிக்கும் பள்ளியின் விளம்பரமாகும். சோப்பு தயாரிக்கக் கற்றுக்கொண்டால் அது நாட்டிற்கும், மக்களுக்கும் செல்வத்தை அளிக்கும் ன்றும், கற்றுக்கொள்ளக் கட்டணம் கிடையாதென்றும்,

தங்கும் இடமும், குறைந்த சம்பளமும் அளிக்கப்படு மென்றும் அந்த விளம்பரம் கூறியது. மாவோவின் மனமும் மாறியது. சோப்பு தயாரிப்பாளராக விரும்பி அந்தப் பள்ளிக்கும் பணம் அனுப்பினார். மாவோவின் நண்பர் ஒருவர் சட்டம் படித்துவந்தார்; அதில் சேரும்படி மாவோவை அவர் வற்புறுத்திவந்தார். அத்துடன் சட்டப் பள்ளிக்கூடம் குறித்துப் பத்திரிகையில் வந்த விளம்பரங்களும் மாவோவைக் கவர்ந்தன. சட்டம் படித்தால் அற்புத சாதனைகளைப் புரியலாம் என்று அந்த விளம்பரங்கள் கூறின. அந்தப்பள்ளியிலும் மாவோ தன் பெயரைப் பதிவு செய்துகொண்டார். இதற்குப் பின், வர்த்தகப் பள்ளி விளம்பர மொன்றைப் மாவோ படித்தார். நாடு பொருளாதார யுத்தத் தில் இருக்கிறது. எனவே நாட்டின் பொருளா தாரத்தை மேம்படுத்தக் கூடிய பொருளாதார நிபுணர்கள் மிகவும் தேவை. எனவே அந்தப் பள்ளியில் சேர்ந்துவிடு, என்று நண்பர் ஒருவர் கூறிய அறிவுரையைக் கேட்டு மாவோ அந்தப் பள்ளியிலும் தன் பெயரை பதிவு செய்யக் கட்டணம் அனுப்பினார். இந்தச் சமயத்தில் ''உயர் வர்த்தக பொதுப் பள்ளி'' என்ற பள்ளியின் சார்பாகச் செய்யப்பட்ட விளம்பரம் மாவோவின் கண்களை ஈர்த்தது. அது அரசாங்கத்தால் நடத்தப்படுவ தென்றும், சிறந்த ஆசிரியர்கள் அங்கே பாடங்களை நடத்துகிறார்கள் என்றும் மாவோ கேள்விப்பட்டார். தன் தந்தைக்கும் அது குறித்து எழுதினார். வர்த்தக அறிவுதான் பயன் தரும் என்ற நம்பிச்கை கொண்டிருந்த மாவோவின் தந்தையார் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். மாவோ அந்தப் பள்ளியில் சேர்ந்து படித்தார். ஆனால் அந்தப் பள்ளியில் பெரும்பாலான பாடங்கள் ஆங்கிலத்தி லேயே நடத்தப்பட்டதால் மாவோ மிகவும் சிரமப் பட்டார். ஒரு மாதத்திற்குப் பின் அதிலிருந்து விலகி மீண்டும் விளம்பரங்களைப் படிக்க ஆரம்பித்தார். அதைத்தொடர்ந்து முதல் மாகாண நடுநிலைப் பள்ளியில்

மாவோ சேர்ந்தார். ஒரு சில மாதங்களுக்குள் அந்தப் பள்ளியும் மாவோவிற்குப் புளித்துப்போய்விட்டது.

மாவோ ஒரு திடமான முடிவுக்கு வந்தார். சுய கல்வி என்பதுதான் தனக்கு ஏற்றது என்று கருதிய அவர் தனக்குத்தானே ஒரு அட்டவணை தயாரித்துக்கொண்டு ஹூனான் மாநிலபொது நூலகத்தைநோக்கிச்சென்றார். காலையில் நூலகம் திறக்கப்படும்போது உள்ளே நுழைப வர், இரவில் அது மூடப்படும்போதுதான் வெளியே வருவார். மதியத்தில் இரண்டு சோற்றுக் கட்டிகளை வாங்கி உண்பார்.

இந்த நூலகத்தில் புவியியல், உலக வரலாறு குறித்த பல நூல்களை மாவோ கற்றார். ''நாடுகளின் செல்வம்'' என்ற ஆடம் ஸ்மித்தின் நூலும் ''உயிரினங்களின் தோற்றம்'' என்ற டார்வினின் நூலும், ஸ்பென்சருடைய ''தர்க்கவியல்'' என்ற நூலும் அவரைக் கவர்ந்தன. மற்றும் ஜான் ஸ்டுவார்ட் மில், மாண்டெஸ்க் ஆகியோ ருடைய நூல்களையும் ரஷ்யா, அமெரிக்கா, இங்கிலாந்து பிரான்ஸ் மற்றுமிதர நாடுகளின் புவியியலையும் வரலாற் றையும் மாவோ படித்தார்.

இச்சமயத்தில் மாவோ, 'ஸியாங்ஸியாங் மாவட்டத் துக்காரர்கள்' தங்குவதற்கான ஒரு சத்திரம் போன்ற இடத்தில் தங்கியிருந்தார். அங்கே மேலும் தங்க முடியாத நிலைமை அவருக்கு ஏற்பட்டது, உணவிற்கும் வழி யில்லை. ஒரு பள்ளியில் சேர்ந்து படித்தால் மட்டுமே செலவுக்குப் பணம்தர முடியுமென்று தந்தையார் கூறிவிட் டார். எனவே மாவோ மீண்டும் பத்திரிகை விளம்பரங் களைப் படிக்கத்தொடங்கினார். அதன் மூலம் 'ஹூனான் சாதாரண பள்ளியில்,சேர்ந்து படித்தார். அதற்குப் பின் விளம்பரங்களைப் படிப்பதையே நிறுத்திவிட்டார்.

இந்தப் பள்ளியில் படிக்கும் பொழுது மாவோவின் அரசியல் சிந்தனைகள் தெளிவாக உருப்பெற ஆரம்பித்

தன. அவர் சமூக விஞ்ஞானப் பாடங்களைப் படிப்பதில் அதிக ஆர்வங் காட்டினார். இயற்கை விஞ்ஞானத்திலும் ஓவியத்திலும் அவருக்கு ஆர்வம் குறைவாகவிருந்தது. இந்தப் பள்ளியில் கற்பித்துவந்த 'யாங் சங்ஜி' என்ற ஆசிரியர் மாவோவை மிகவும் கவர்ந்தார். அவர் இங்கிலாந்தில் படித்தவராவார். மிகுந்த ஒழுக்கம் நிறைந்தவரும், நெறியாளரும்மான அவர், 'ஒழுக்கவியல்' பாடத்தைக் கற்பித்துவந்தார். தன்னுடைய மாணவர் களின் சிந்தனையில் நேர்மை, ஒழுக்கம், நற்குணங்கள், சமூகத்திற்குப் பயனுள்ளவர்களாக இருத்தல் போன்ற எண்ணப்போக்கைப் புகுத்த வேண்டுமென்பதில் அவர் ஆர்வமாக இருந்தார். அந்த ஆசிரியரின் தாக்கத்திற்கு ஆளான மாவோ, 'சிந்தனையின் சக்தி' (Energy of the mind) என்ற கட்டுரையை எழுதி ஆசிரியரிடமிருந்து 100க்கு 100 மதிப்பெண்கள் பெற்றார்.

மற்றொரு ஆசிரியரான டாங் என்பவர் "மக்கள் பத்திரிகை" என்ற பத்திரிகையின் பழைய இதழ்களை மாவோவிற்கு அளித்தார். டாக்டர் சன்யாட்சென் உருவாக்கியிருந்த ஒரு புரட்சிகர ரகசிய அமைப்பு டுங் மெங் ஷுயி' குறித்தும் அதன் நடவடிக்கைகள், திட்டம் குறித்தும் இந்தப் பழைய இதழ்கள் மூலம் மாவோ அறிந்துகொள்ள முடிந்தது. இரண்டு சீன மாணவர்கள் நடைப் பயணமாகவே திபேத் வரை போய்வந்த செய்தியை இந்தப் பத்திரிகையில்படித்த மாவோ அதைப்போல் தானும் ஒரு பயணம் செய்ய வேண்டுமென்று விரும்பினார். கையில் பணமில்லாததால், தன்னுடைய சொந்த ஹுனான் மாநிலத்திலேயே பயணம் செய்ய முடிவெடுத்தார்.

அதன்படி அடுத்து வந்த கோடை விடுமுறையின் போது மாவோவும், அவருடைய நண்பர் ஒருவரும் சேர்ந்து பயணம் மேற்கொண்டனர். ஒருகாசு கூடச் செல வில்லாமல் கிராமங் கிராமமாகப் போனார்கள். கிராம

மக்கள் அவர்களை அன்புடன் வரவேற்று 'உணவளித்து' தங்குமிடம் தந்து உபசரித்தார்கள். இந்தப் பயணம் மாவோவிற்கு மிகுந்த உற்சாகத்தை ஏற்படுத்தியது. மக்களிடம் பரிவுடன் இருத்தல், அவர்களுக்குச் சேவை செய்தல் என்ற அவருடைய கருத்தை மேலும் அந்தப் பயணம் வலுப்படுத்தியது.

சிறிது காலம் கழித்து, ஒருமித்த கருத்துடைய சில நெருக்கமான நண்பர்களைப் பெறும்பொருட்டு, சாங்ஷா விலிருந்து வெளிவரும் நாளிதழ் ஒன்றில் மாவோ ஒரு விளம்பரம் செய்தார்.

''தேசபக்த வேலையில் ஆர்வங் கொண்டுள்ள இளைஞர்கள், நாட்டிற்காக எவ்விதத் தியாகமும் செய்யத் தயாராக உள்ள திடமும், உறுதியுமிக்க இளைஞர்கள் என்னிடம் தொடர்புகொள்ளலாம்'' என்று அந்த விளம்பரத்தில் மாவோ கூறியிருந்தார். இந்த விளம்பரத் திற்கு நான்கு பேர்கள் மட்டும் பதிலளித்தனர்.

படிப்படியாக, தன்னை மையமாக வைத்து, மாவோ ஒரு மாணவர் குழுவை உருவாக்கினார். இந்தக் குழுவினர் அன்றாட வாழ்க்கை, காதல் போன்ற 'சிறிய' விஷயங் களை விவாதிப்பதில்லை. மனிதனின் தன்மை, மனித சமூகம், உலகம், பிரபஞ்சம் ஆகிய 'பெரிய' விஷயங் களைக் குறித்துப் பேசுவதையே விரும்பினர்.

அது மட்டுமல்ல, இந்தக்குழுவினர் உடலை வலுவாக வைத்துக்கொள்வதிலும் தீவிரமாக இருந்தனர். பனிக் கால விடுமுறை நாட்களில் அவர்கள் வயல்களுக்குள் ஓடியும், மலைகளில் ஏறி இறங்கியும் அதேபோல் நகர மதில்களில் ஏறி இறங்கியும் பயிற்சி செய்தனர். நீரோடைகளிலும், ஆறுகளிலும் வெகுநேரம் நீச்சலடித் தனர். மழை பெய்தால் சட்டைகளைக் கழற்றி வைத்து விட்டு மழையிலேயே நனைந்து நின்றனர்.

இதற்கு 'மழைக் குளியல்' என்று பெயரிட்டனர். தகிக்கும் வெய்யிலில் சட்டையைக் கழற்றிவிட்டு சூரிய வெப்பத்தில் வாடிவதங்கினர், இதற்கு 'சூரிய குளியல்' என்று பெயரிட்டனர். வசந்தகால பெருங் காற்றின் பொழுது, இதுதான் 'காற்றுக் குளியல்' விளையாட்டு என்று கோஷமிட்டனர். பனி கொட்டும் சமயத்திலும் திறந்த வெளியில் வேண்டுமென்றே இவர்கள் படுத்துறங்கினர்; நவம்பர் மாதங்களில் குளிர்ந்த ஆற்று நீரில் வேண்டுமென்றே நீச்சலடித்தனர். இவையனைத்தையும் அவர்கள் 'உடல் பயிற்சி' என்ற பெயரில் செய்தனர்.

இந்தக் கடுமையான பயிற்சியானது பின்னாட்களில் மாவோவிற்குப் பெரிதும் உதவியாக இருந்தது.

இதே சமயத்தில் மாவோ இதர ஊர்களிலும், நகரங்களிலுமிருந்த பல மாணவர்களுடனும், நண்பர்களுடனும் கடிதப் போக்குவரத்து நடத்திவந்தார். ஓர் உறுதியான அமைப்பை உருவாக்க வேண்டிய அவசியம் உள்ளதென்று மாவோ படிப்படியாகக் கருதினார். இதன் விளைவாக மாவோவும், சில நண்பர்களும் சேர்ந்து ''புதிய மக்கள் ஆய்வுக் கழகம்'' (New Peoples 'Study Society) என்ற அமைப்பை 1917ம் ஆண்டில் உருவாக்கினர். இதில் 70 முதல் 80 உறுப்பினர்கள் வரை இருந்தனர். இவர்களில் பலர் பின்னர் சீனகம்யூனிஸ்ட் கட்சியின் சீனப்புரட்சியின் பிரபல தலைர்களாக விளங்கினார்கள்.

இதே சமயத்தில் ஹுபெய் (Hubei) என்ற இடத்தில் ''சமூக நலக் கழகம்'' (Social Welfare Society,) என்ற பெயரில் ஓர் அமைப்பு உருவாக்கப்பட்டது. இதன் உறுப்பினர்கள் பலரும் பிற்காலத்தில் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தனர், இதே காலகட்டத்தில் ஷாங்காங் (Shanghai) ஹாங்செள (Hangzhou) ஹாங்கௌ (Hankou,) மற்றும் டியான்ஜின் (Tianjin) போன்ற நகரங்களிலும் போர்க்குண மிக்க இளைஞர்களால் உருவாக்கப்பட்ட தீவிர மனோ

பாவம் கொண்ட கழகங்கள் உருப்பெறலாயின. டியான் ஜின் நகரில் உருவான ''விழிப்படைந்துவரும் கழகம்'' (Awakeningi Society) என்ற அமைப்பை உருவாக்கியவர் களில் சூ என் லாய், அவருடைய எதிர்கால மனைவி டெங் யிங் சோ (Deng Ying chao) ஆகியோரும் உள்ளடங்குவர்.

போர்க்குணமிக்க வாலிபர்களின் இத்தகைய அமைப்புகள் சீன அரசியலில் தங்களுடைய தாக்கத்தை ஏற்படுத்தத்தொடங்கின. இத்தகைய அமைப்புகள் உருப் பெருவதற்கு மூலகாரணமா யிருந்தது ''புதியஇளைஞன்'' (New Youth) என்ற பத்திரிகையாகும். இது சென் டூ ஸு (Chen Du Xiu) என்பவரைஆசிரியராகக் கொண்டதாகும்; இலக்கிய மறுமலர்ச்சி (Literary Renaissance) என்ற அமைப்பின் சார்பாக வெளியிடப்பட்ட பிரபலமான ஏடாகும். சென் டூ ஸு யின் எழுத்துகள் மாவோ மீதும் தாக்கத்தை ஏற்படுத்தின.

*1912*-ம் ஆண்டு 'ஹுனான் சாதாரண பள்ளி'யில் நுழைந்தார் மாவோ. *1918*-ம்ஆண்டில் பட்டம் பெற்றார் மிதவாதம், ஜனநாயகச் சீர்திருத்தவாதம், கற்பனாவாத சோசலிசம் ஆகிய கருத்தோட்டங்களின் கலவையாக அவருடைய சிந்தனைப் போக்கு மிளிர்ந்தது. 19-ம் நூற்றாண்டின் ஜனநாயகம், கற்பனாவாதம், பழைமை வாத மிதவாதம் போன்றவை குறித்து மேலெழுந்த வாரியான பார்வையே அவருக்கிருந்தது. ஆனால் ராணுவவாதப் போக்குகளின் எதிர்ப்பாளனாகவும் ஏகாதிபத்திய எதிர்ப்பாளனாகவும் அவர் விளங்கினார்.

யுவான் ஷிகாய் *1916*-ம் வருடம் ஜூன் மாதம் 6-ந் தேதி இறந்தான். அவனுக்குப் பின் லீ யுவான் ஹீங் என்பவன் பீகிங் அரசாங்கத் தலைவனானான். இவன் கலைக் கப்பட்ட நாடாளுமன்றத்தைக் கூட்டினான். தாற்காலிகக் குடியரசுத் திட்டத்தை மறுபடியும் அமலுக்குக் கொண்டு

வந்தான், ஆனால் பிரதமராகயிருந்த துவான் என்பவன் 1917-ம் ஆண்டில் நாடாளுமன்றத்தைக் கலைக்கும்படிச் செய்தான். ஜெர்மனிமீது யுத்தப் பிரகடணம் செய்தான்.

யுத்தத்திற்கு விரோதமான நாடாளுமன்ற உறுப்பினர்கள் சீனாவின் தெற்குப் பகுதிக்கு வந்து காண்டான் நகரில் ஒரு சிறப்பு நாடாளுமன்றத்தைக் கூட்டினர். ஜப்பானிலிருந்து திரும்பிய சன்யாட் சென்னைத் தலைவராக பிரகடனம் செய்தனர்.

இவ்வாறு சீனாவில் இரண்டு அரசாங்கங்கள் தோன்றின. பீகிங் அரசாங்கம் என்பது பிற்போக்குச் சக்திகளின் பிரதிநிதியாகவும், காண்டன் அரசாங்கம் என்பது முதலாளித்துவ ஜனநாயகத்தின் முற்போக்கான பிரதிநிதியகாவும் இருந்தன.

# ரஷ்யப் புரட்சியின் தாக்கம்

1917-ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் நடைபெற்ற மகத்தான ரஷ்யப் புரட்சியானது சீனாவில் அதன் தாக்கத்தை ஏற்படுத்தத் தொடங்கியது. சீனாவில் இதுவரை ரஷ்யர் பிடித்து வைத்திருந்த பகுதிகளை சீனாவிற்கே திருப்பித் தந்துவிடுவதாகவும், தனக்குள்ள விசேஷ உரிமைகளைத் துறந்துவிடுவதாகவும், இரு நாடுகளுக்குமிடையில் சம உறவுகளை விரும்புவதாகவும் புதிய ரஷ்ய அரசு அறிவித்தது. இது டாக்டர் சன்யாட் சென்னுக்கும், சீனாவின் மக்களுக்கும் மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது.

சீன நாட்டைச் சேர்ந்த பலர் சோவியத்நாட்டிற்குள் போய் வந்து அங்கே நடைபெற்றுவந்த மகத்தான மாற்றங்களைக் கண்டு வியந்தனர். தங்கள் நாட்டிலும் அதுபோல நடைபெற வேண்டுமெனப் பெரிதும் விரும்பினர்.

1918-ம் ஆண்டு இறுதியில் சன்யாட் சென், ரஷ்யப் புரட்சியையும், லெனினையும் பாராட்டி, லெனினுக்கு ஒரு வாழ்த்துத் தந்தி அனுப்பினார்.

சோவியத் யூனியன், ஒரு புரட்சிப் படையை நிறுவுவதற்கு சன்யாட் சென்னுக்கு உதவிசெய்தது. சோவியத் செஞ்சேனை நடத்துவதைப் போல் ஒரு ராணுவக் கல்லூரியை நிறுவ சன்யாட் சென் விரும்பினார். அதன் விளைவாக 1924-ம் ஆண்டு காண்டன் நகரில் ராணுவக் கல்லூரி நிறுவப்பட்டது. இதிலிருந்து உருவாக்கப்பட்ட படைவீரர்கள் தேசியப் புரட்சிப் படையின் முதுகெலும்பாக விளங்கினார்கள்.

1919-ம் ஆண்டு அக்டோபர் 5-ந் தேதி மாவோவின் தாயார் காலமானார். தாயாரிடம் மிகுந்த வாஞ்சை யுடனிருந்த மாவோவிற்கு அது மிகுந்த வருத்தத்தை அளித்தது. தாயாரின் மறைவானது, தன் கிராமத் துக்குச் செல்ல வேண்டும் என்ற எண்ணத்தையே மாவோ வின் சிந்தனையிலிருந்து அகற்றிவிட்டது. சிறிதுகாலம் கழித்து மாவோவின் தந்தையாரும் காலமானார்.

அச்சமயத்தில் ஹுனானிலிருந்து பல மாணவர்கள் பிரான்ஸ் நாட்டிற்குப் போய்''வேலை செய்துகொண்டே படிப்பது'' என்ற திட்டத்தின்கீழ் கல்விபெறத் திட்ட மிட்டு வந்தனர். பிரான்ஸ் அரசாங்கம் ஏற்கெனவேயே இந்தத் திட்டத்தைப் பயன்படுத்தி இரண்டாம் உலகப் போரில் தனது சார்பாக யுத்தத்தில் பங்கேற்பதற்காக சீன இளைஞர்களைத், தனது படையில் சேர்த்துவந்தது. பிரான்ஸ் நாட்டிற்குச் செல்லும் மாணவர்கள், பெய்பிங் என்று அன்று அழைக்கப்பட்டு வந்த பீகிங் (தற்போதைய சீனத் தலைநகர் பெய்ஜிங்) நகரத்திற்குப் போய் சிறிது காலம் பிரெஞ்சு மொழி கற்றுக்கொண்டு அதன்பின் பயணம் மேற்கொள்வது வழக்கம். இந்த இயக்கம் உருப்பெற மாவோ உதவினார் என்பதோடு புதிய மக்கள் ஆய்வுக் கழகமும் இதற்கு ஆதரவளித்தது. மாவோ படித்துவந்த பள்ளியின் சில மாணவர்களும் பிரான்ஸ் நாட்டைநோக்கிப் பணத்தைத் தொடங்கினர்.

இவ்வாறு ஹுனானிலிருந்து பீகிங்கிற்குச் சென்ற மாணவர்களுடன் மாவோவும் பயணமானார். அவருக்கு ஐரோப்பா செல்ல விருப்பம் கிடையாது. தன் சொந்த நாட்டைச் சரிவரத் தெரிந்துகொள்ள வேண்டும். கிடைக் கும் நேரத்தை சீனாவிற்காகப் பயனுள்ள வழியில் செல வழிக்க வேண்டும் என்று அவர் கருதினார்.

பீகிங்கிற்கு மாவோ புறப்பட்டபொழுது அவரிடம் பணம் கிடையாது. சில நண்பர்களிடம் கடன் வாங்கிக்

கொண்டு புறப்பட்டார். எனவே பீகிங்கிற்கு வந்தவுடன் உடனே வேலை தேட வேண்டிய அவசியம் அவருக்கு ஏற்பட்டது. பீகிங் நகரில் விலைவாசிகளும் அதிகமாக யிருந்தன.

அந்த நகருக்கு வந்து சேர்ந்த உடனேயே மாவோ தன்னுடைய பழைய ஆசிரியர் யாங் சங்ஜியைச் சென்று சந்தித்தார். அவர் அப்பொழுது பீகிங் தேசிய சர்வகலாசாலையில் பேராசிரியராகப் பணிபுரிந்து வந்தார். தனக்கு உடனடியாக ஒரு வேலை தேவை என்று மாவோ கூறியதோடு அதற்காக உதவி புரியும் படியும் அவரைக் கேட்டுக்கொண்டார். மாவோ மீது அக்கறை கொண்டிருந்த அந்தப் பேராசிரியர், பீகிங் சர்வகலாசாலை நூலகராக அப்பொழுது பணியாற்றி வந்த லீ டாஷோவிடம் (Li Dazhao) மாவோவை அழைத்துச் சென்று அறிமுகப்படுத்தி வைத்தார். அவர் உதவி நூலகர் என்ற பதவியை மாவோவிற்கு அளித்தார். அதற்காக மாதமொன்றுக்கு எட்டு டாலர் ஊதியமாக அளிக்கப்பட்டது.

லீ டோஷோ பின்னாட்களில் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் ஸ்தாபர்களில் ஒருவராக விளங்கினார்.

மாவோவின் வேலையானது நூலகத்திற்கு வருவோரின் பெயர்களைப் பதிந்து வைப்பதாகும். அவ்வாறு வருவோர் மாவோவை ஒரு பொருட்டாகக் கருதியதில்லை. மறுமலர்ச்சி இயக்கத்தைச் சேர்ந்த பல பிரமுகர்கள் நூலகத்திற்கு வருவதுண்டு. அவர்களைக் குறித்து மாவோ அறிந்திருந்தார். அரசியல், கலாசார விஷயங்கள் குறித்து அவர்களுடன் உரையாட மாவோ பெரிதும் விரும்பியதுண்டு. ஆனால் தெற்கத்திய சீன மொழியைப் பேசும் ஒரு உதவி நூலகரின் வார்த்தைகளைக் கேட்க அந்தப் பெரிய மனிதர்களுக்கு ஏது நேரம்?

ஆனாலும் மாவோ சோர்வடையவில்லை. அவர் தத்துவக் கழகத்திலும் (Society of Philosophy)

பத்திரிகைத் தொழில் கழகத்திலும் (Journalism Society) சேர்ந்தார். அதன்மூலம் சர்வகலாசாலை வகுப்புகளில் கலந்துகொண்டார்.

இந்த நூலகத்தில் மாவோ வேலை செய்துவந்த பொழுது அவருக்குப் பல நண்பர்கள் கிடைத்தனர். அத்துடன் முதன் முறையாக யாங் கை குய் (Yang Kai Hui) என்னும் இளம் பெண்ணைச் சந்திக்கும் வாய்ப்பு மாவோவிற்குக் கிடைத்தது. இந்த மாணவி மாவோவின் மதிப்பிற்குரிய பேராசிரியரும், அவருக்குப் பல உதவி களைச் செய்தவருமான யாங் சங்ஜியின் புதல்வி ஆவார். மாவோ—யாங் கை குய் நட்பு வளர்ந்து காதலாக மாறியது.

பீகிங்கில் மாவோ சிரமத்துடன் வாழ வேண்டியிருந் தது. மூன்று கண் கிணறு என்ற பகுதியில் ஒரு சிறிய அறையில் ஏழு பேருடன் அவர் தங்க வேண்டியிருந்தது. அவர்கள் புரண்டு படுப்பதற்குக் கூட இடம் கிடை யாது. உறங்கும்போது மாவோ திரும்பிப் படுக்கவேண்டு மென்றாலும் இருபுறமும் படுத்திருப்பவர்களை விழிக்கச் செய்ய வேண்டியிருந்தது. மாவோ அதிகாலையில் எழுந்துபூங்காக்களுக்கும்,பழைய அரண்மனை மைதானங் களுக்கும் சென்று அங்குள்ள பூக்களையும், செடி, கொடி களையும் இயற்கைக் காட்சிகளையும் கண்டு பரவச மடைவார். இவற்றைக் குறித்து சீனக் கவிஞர்கள் பாடிய பாடல்களையும் அவர் நினைவுபடுத்திக் கொள்வ துண்டு. ''பீகிங்'' நகரத்தின் எண்ணற்ற மரங்கள் என்னுள் வியப்பையும், போற்றுதலையும் ஏற்படுத்தி யது'' என்று பின்னாட்களில் ஒரு முறை மாவோ நினைவு கூர்ந்தார்.

1919-ம்ஆண்டின் ஆரம்பத்தில் பிரான்ஸ்நாட்டிற்குச் செல்லவிருந்த மாணவர்களை வழியனுப்பும் பொருட்டு அவர்களுடன் சேர்ந்து மாவோவும் ஷாங்காய் நகருக்குச்

சென்றார். போகும் வழியில் அவர் பண்டைகால சீன அறிஞர் கன்பூசியஸின் கல்லறைக்கு விஜயம் செய்தார். அதன்பின் ஷாங்காய் நகருக்குச் சென்று பிரான்ஸ் நாட்டிற்குச் செல்லும் மாணவர்களை வழியனுப்பி வைத்து விட்டு சங்ஷா நகருக்குத் திரும்பினார்.

சங்ஷா நகருக்குத் திரும்பியதிலிருந்து மாவோ மிகவும் அதிகரித்த அளவில் அரசியலில் நேரிடையாக பங்கேற்கலானார். சீனாவை உலுக்கிய மே 4ந் தேதிய இயக்கத்திற்குப் பின்னால் அவருடைய நேரத்தின் பெரும் பகுதி மாணவர் அரசியல் நடவடிக்கைகளுக்காக செலவிடப்பட்டது. ஹுனான் மாணவர்களுடைய பத்திரிகையான ''ஸியான் ஜியாங் ரெவ்யூ'' என்ற பத்திரிகையின் ஆசிரியராகவும் மாவோ பணியாற்றினார். இந்தப் பத்திரிகையானது சீனாவின் தெற்குப்பகுதியில் நடைபெற்று வந்த மாணவர் இயக்கத்தின் மீது மகத்தான தாக்கத்தை ஏற்படுத்தியது.

சங்ஷாவில் ''கலாசார புத்தகக்கழகம்'' என்ற அமைப்பை உருவாக்குவதற்கு மாவோ உதவி புரிந்தார். இது, நவீன கலாச்சாரம் மற்றும் அரசியல்போக்குகளை ஆய்வு செய்வதற்கான கழகமாகும். இந்த கழகமும் புதிய மக்களாய்வு கழகமும் ஹுனானின் பெரிய அதிகாரியான ஜாங்ஜீங் யாவோ (Zhangjing yao) என்பவனை கடுமையாக எதிர்த்தன. அவனை அகற்றும் படிக் கோரி மாணவர்களின் ஒரு பொது வேலை நிறுத்தத்திற்கு இந்த அமைப்புகள் தலைமை தாங்கிய தோடு அவனுக்கு எதிராக கிளர்ச்சி செய்வதற்காக ஒரு தூதுக்குழுவை பீகிங்கிற்கும், மற்றொரு தூதுக்குழுவை சன்யாட்சென் தீவிரமாக செயல்பட்டு கொண்டிருந்த தென்மேற்கு பகுதிக்கும் அனுப்பி வைத்தனர். தன்னை எதிர்க்கும் மாணவர்கள்மீது பதிலடி கொடுப்பதற்காக இந்த அதிகாரி ''ஸியாங் ஜியாங் ரெவ்யு'' பத்திரிகையை ஒடுக்கிவிட்டான்.

இதன்பின் மக்களாய்வுக் கழகத்தை பீகிங்கில் பிரதிநிதித்துவப்படுத்தும் பொருட்டும், யுத்த வெறியர் களுக்கு எதிரான இயக்கத்தை அங்கே உருவாக்கும் பொருட்டும் மாவோ பீகிங் நகருக்குச் சென்றார். மக்களாய்வுக் கழகமானது, ஜாங்ஜிங் யாவோவிற்கு எதிரான அதனுடைய போராட்டத்தை ஒரு பொதுவான யுத்த வெறியர் எதிர்ப்புக் கிளர்ச்சியாக விரிவுபடுத்தி யிருந்தது; இந்தப் பணியை விரிவுபடுத்துவதற்கான ஒரு செய்தி அமைப்பின் தலைவராக மாவோ செயல் பட்டார். இந்த இயக்கத்திற்கு ஹுனானில் சில வெற்றிகள் கிடைத்தன. ஜாங்ஜிங் யாவோ மற்றொரு-வனால் தூக்கியெறியப்பட்டு சங்ஷாவில் ஒரு புதிய அரசாங்கம் உருவாக்கப்பட்டது. அதே சமயத்தில் மக்கள் நல்வாழ்வுக் கழகமானது வலதுசாரிப் பிரி வென்றும், இடதுசாரிப் பிரிவென்றும் இரண்டு குழுக் களாக உடைந்தது; மிகப்பெரும் சமூக, பொருளாதார மற்றும் அரசியல் மாற்றங்களை ஏற்படுத்தக்கூடிய ஒரு திட்டத்தை உருவாக்க வேண்டுமென்று இடதுசாரிப் பிரிவினர் வலியுறுத்தினர்.

1920-ம் ஆண்டில் மாவோ இரண்டாம் முறையாக ஷாங்காய் நகருகுச் சென்றார். அங்கே அவர் தன் மீது தாக்கம் செலுத்தி வந்த சென் டு ஸுவைச் சந்தித்து ஹுனானில் மறுசீரமைப்பிற்கான குழு'' [League for Reconstruction of Hunan] என்ற பெயரில் ஒரு குழுவை உருவாக்குவது குறித்து விவாதித்தார். அதன்பின் மாவோ, சங்ஷா நகருக்குத் திரும்பி அந்த அமைப்பை உருவாக்க ஆரம்பித்தார். மக்களாய்வுக் கழகத்தில் வேலை செய்துகொண்டே ஓர் ஆசிரியராகவும் மாவோ பணியாற்றினார். இந்தக் கழகம் ஹுனானின் சுதந்திரத் திற்காக ஒரு திட்டத்தைக் கொண்டிருந்தது. இந்த சுதந்திரம் என்பதை இங்கு சுயாட்சி என்று புரிந்து கொள்ள வேண்டும், சீனாவின் வடபகுதியிலிருந்த அரசாங்கத்தின் போக்கினால் வெறுப்படைந்த இந்தக்

கழகம் பீகிங்கினுடனான தொடர்புகளில் இருந்து தன்னை விடுவித்துக்கொண்டால் மட்டுமே ஹுனானை மிக வேகமாக நவீனப்படுத்த முடியும் என்று கருதியதுடன், இந்தக் குழுவினர் பிரிவினைக்காகவும் கிளர்ச்சி செய்தனர். மாவோ அச்சமயத்தில் அமெரிக்காவின் தாமஸ் மன்றோ கோட்பாடு மற்றும் பகிரங்கக் கொள்கையின் பலமான ஆதரவாளாராக இருந்தார்.

ஹுனான் சுதந்திர இயக்கத்தை தன்னுடைய சொந்த நலனுக்காகப் பயன்படுத்திக்கொண்ட ஜாவோ ஹெங்டி (Zhao Hengti) என்ற ராணுவாதிக்கவாதி, ஹுனானின் ஆளுநரை விரட்டிவிட்டு அந்தப் பதவியைப் பிடித்துக் கொண்டான். ஹுனானின் சுதந்திர இயக்கத்தை ஆதரிப்பது போல் நடித்த இந்த நபர், முன்பு சீனாவின் ஒன்றுபட்ட சுயாட்சிமாநிலங்கள் என்ற கருத்தை வலியுறுத்தினான்; ஆனால் அவன் அதிகாரத்தைப் பிடித்தவுடனேயே இந்த ஜனநாயக இயக்கத்தை முழுவேகத்துடன் ஒடுக்கினான். மாவோவின் தலைமையிலிருந்த மக்களாய்வுக்கழகம் ஆணுக்கும், பெண்ணுக்கும் சம உரிமைகள் வேண்டுமென்றும், தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கம் வேண்டுமென்றும்கோரியது. ஒரு முதலாளித்துவ ஜனநாயகத்திற்கான மேடையைப் பொதுவாக அங்கீகரித்தது. ''புதிய ஹுனான்'' என்ற அவர்களுடைய பத்திரிகையானது இத்தகைய சீர்திருத்தங்களை வலியுறுத்தியது. இந்த அமைப்பானது, ராணுவாதிக்கவாதிகளால் நியமிக்கப்பட்ட நிலப்பிரபுக்களையும் மற்றும் பெருந்தனக்காரர்களையும் பெரும்பான்மை உறுப்பினராகக் கொண்டிருந்த மாநில நாடாளுமன்றத்தின் மீது ஒரு தாக்குதலைத் தொடுத்தது. மடத்தனமான மற்றும் ஆடம்பரமான வார்த்தை ஜாலங்களைக் கொண்டிருந்த பதாகைகளையும் காகிதப் பெயர்ப் பட்டியல்களையும் கிழித்தெறிவதுடன் இந்தப் போராட்டம் முடிவுற்றது.

நாடாளுமன்றத்தின் மீதான இந்தத் தாக்குதலானது ஹுனானில் ஒரு பெரிய விஷயமாகக் கருதப்பட்டது என்பதுடன் ஆட்சியாளர்களை பயங்கொள்ளவும் செய்தது. ஆனால் ஜாவோ ஹெங்டி,இந்த இயக்கத்தை வன்முறை மூலம் ஒடுக்கியதைத் தொடர்ந்து மக்களாய்வுக் கழகம் தனது போராட்டத்தை அவனுக்கு எதிராகத் திருப்பிவிட்டது. அந்த ஆண்டில் மகத்தான ரஷ்யப் புரட்சியின் மூன்றாம் ஆண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடும் பொருட்டு இந்தக் கழகம் ஓர் ஆர்ப்பாட்டத்தை நடத்தியது. அது போலீசாரால் ஒடுக்கப்பட்டது, கூட்டத்தில் செங்கொடியை ஏற்றுவதற்கு ஆர்ப்பாட்டக்காரர்கள் சிலர் முயன்றபோது போலீசாரால் தடுக்கப்பட்டனர்.

அன்றிருந்த அரசியல் சட்டத்தின் கீழ் மக்களுக்கு கூட்டம் கூடும் உரிமை, அமைப்பாக செயல்படும் உரிமை, மற்றும் பேச்சுரிமை இருக்கிறதென்று ஆர்ப்பாட்டக்காரர்கள் போலீசாருக்கு சுட்டிக்காட்டினர். ஆனால் போலீசார் எதற்கும் சம்மதிக்கவில்லை. தாங்கள் அரசியல் சட்டத்தைப் படிக்க வரவில்லை என்றும், மாநில ஆளுநர் ஹெங்டியின் உத்தரவை அமுல் நடத்த வந்ததாகவும் அவர்கள் திமிராக பதில் அளித்து ஆர்ப்பாட்டக்காரர்களை விரட்டி அடித்தனர்.

இந்த நிகழ்ச்சிப் போக்குகள் அனைத்தும் மாவோவின் சிந்தனையோட்டத்தில் ஒரு புதிய அம்சத்தைப் புகுத்தின. வெகுஜன நடவடிக்கை மூலம் பெறப்படுகிற வெகுஜன அரசியல் அதிகாரம் மட்டுமே வேகமான சீர்திருத்தங்களை அடைவதை உத்தரவாதம்செய்ய முடியும் என்ற புதிய உணர்வை மாவோவுக்கு அளித்தன

மாவோ இரண்டாம் முறையாக பீகிங்கிற்கு விஜயம் செய்தபோது ரஷ்யப் புரட்சிக்குப் பின் சோவியத் நாட்டில் நிகழ்ந்துவரும் சம்பவங்கள் குறித்த அனைத்துச்

செய்திகளயும் ஆர்வமாகப் படித்தார்; சீன மொழியில் வெளிவந்துள்ள ஒருசில கம்யூனிஸ்ட் நூல்களையும் தேடி அலைந்து வாங்கினார். சீன மொழியில் வந்த 'கம்யூனிஸ்ட் கட்சிஅறிக்கை, 'காட்ஸ்கி எழுதிய' வர்க்கப் போராட்டம்' மற்றும் கிர்கப் (Kirkupp) எழுதிய 'சோசலிசத்தின் வரலாறு' ஆகிய நூல்களை மாவோ படித்தார். இந்தப் புத்தகங்கள் அனைத்தும் மாவோவின் சிந்தனையில் ஆழப்பதிந்தன என்பதுடன் மார்க்சியம் குறித்த ஒரு நம்பிக்கையை அவரது சிந்தனையில் தோற்றுவித்தன. ''மார்க்சியம் என்பதுதான் வரலாறு குறித்த சரியான விளக்கம் என்று நான் ஏற்றுக்கொண்ட பின்என்னிடம் ஊசலாட்டமேகிடையாது.1920-ம்ஆண்டு கோடை காலத்தில் கோட்பாடளவிலும் ஓரளவுக்கு செயல்பாடு மூலமும் நான் ஒரு மார்க்சியவாதியாகக் ஆனேன்; அதிலிருந்து நான் என்னை மார்க்சியவாதியாக கருத ஆரம்பித்தேன்'' என்று பின்னாட்களில் மாவோ நினைவுகூர்ந்தார்.

அதே ஆண்டில் யாங் கை குய் யுடன் அவர் கொண்டிருந்த காதலும் கனிந்து திருமணத்தில்முடிந்தது. ஹூனானில் இருந்த மாவோவின் நண்பர்கள் மற்றும் தோழர்களிடையே இந்தத் திருமணம் பெரும் பாராட்டு தலைப் பெற்றது. ஏனென்றால் பீகிங் தேசிய சர்வகலா சாலையின் சிறந்த மாணவியான யாங் கை குய், மாவோவைப் போன்று பரந்த முற்போக்குப் பார்வை உடையவர் என்பதோடு, மக்களுக்குச் சேவை செய்ய வேண்டுமென்பதில் மிகுந்த ஆர்வம் உடையவராகவும் இருந்தார்.

# சீனக் கம்யூனிஸ்ட் கட்சி: ஒரு விடிவெள்ளியின் உதயம்

1919ம் ஆண்டில் சீனாவில் கம்யூனிஸ்ட் கட்சியை உருவாக்குவதற்காக சென் டூ ஸு கம்யூனிஸ்ட் அகிலத்துடன் தொடர்பு ஏற்படுத்திக்கொண்டு இருந்தார். கம்யூனிஸ்ட் அகிலம் 1920-ம் ஆண்டில் எம்.மார்லின் (M. Marljn)என்ற தனது செயலூக்கமுள்ள, பொறுமையுள்ள பிரதிநிதியை ஷாங்காய் நகருக்கு அனுப்பி வைத்து சீனக் கம்யூனிஸ்ட் கட்சியை உருவாக்கத் தேவையான தொடர்புகளை ஏற்படுத்தச் செய்தது. ஷாங்காய் நகரில் சென் டூ ஸு விரைவில் ஒரு மாநாட்டைக் கூட்டினார். அந்த மாநாடு குறித்து மாவோ நினைவு கூறுகிறார்: "1921-ம் ஆண்டு ஜூன் மாதத்தில் கம்யூனிஸ்ட் கட்சியின் ஸ்தாபகக் கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக நான் ஷாங்காய் நகருக்குச் சென்றேன். சென் டூ ஸுயும் லி டாசோவும் அந்த அமைப்பில் தலையாய பங்கு வகித்தனர். அவர்கள் இருவரும் சீனாவின் அற்புதமான அறிவுஜீவித் தலைவர்களில் அடங்குவர். லி டாசோவின் கீழ் பீகிங் தேசிய சர்வ கலாசாலையில் நான் உதவி நூலகராக இருந்தபோது மார்க்சியக் கோட்பாட்டை நோக்கி நான் துரிதமாக வளர்ச்சியடைய முடிந்தது; அதே போல் அதே திசையில் என்னுடைய ஆர்வம் தொடர்ந்து செல்வதற்கு சென் டூ ஸுவும் காரணமாக இருந்தார். நான் படித்த மார்க்சிய நூல்கள் குறித்து இரண்டாம் முறையாக நான் ஷாங்காய்க்குச் சென்றிருந்ததுபோது சென் டூ ஸுவுடன் விவாதித்தேன் அதுகுறித்து அவர்கொண்டிருந்தஆழமான நம்பிக்கை என்னுடைய வாழ்வின் ஒரு நெருக்கடியான கட்டத்தில் என்னை வெகுவாகக் கவர்ந்தது."

பன்னிரண்டு உறுப்பினர்களைக் கொண்ட சீனக்கம்யூனிஸ்ட்கட்சியின் இந்த முதல்குழு ஷாங்காயில்உருவாக்கப்பட்ட சமயத்திலேயேபிரான்சிலிருந்த சீனத் தொழிலாளிகளும் மாணவர்களும் சேர்ந்து அங்கே ஒரு சீனக் கம்யூனிஸ்ட் கட்சியை உருவாக்கினர். இதை நிறுவியவர்களுல் சூ என் லாய், லி லிசான் மற்றும் சியாங் ஜிங்யூ என்ற பெண்ணும் அடங்குவர். சிறிது காலம் கழித்து ஜெர்மனியிலிருந்தசீனர்கள் அங்கே ஒரு சீனக் கம்யூனிஸ்ட் கட்சியை உருவாக்கினர். இதன் உறுப்பினர்களில் சூட்டேயும் ஒருவர். இவர் பின்னாட்களில் சீனச் செஞ்சேனையின் பிரதமத் தளபதியாக ஆனார். மாஸ்கோவிலும், ஜப்பானிலும் சீனக் கம்யூனிஸ்ட் கட்சிக் கிளைகள் உருவாக்கப்பட்டன.

அவ்வாண்டு அக்டோபரில் ஹுனான் மாநில முதல் கம்யூனிஸ்ட் கட்சிக் கிளை உருவாக்கப்பட்டது. மாவோ அந்தக் கிளையின் உறுப்பினராகவும் ஆனார். இதர மாநிலங்களிலும்கம்யூனிஸ்ட் கட்சிக் கிளைகள் உருவாக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. சிறிது காலம் கழித்து மாவோ, ஹுனான் கட்சிக் குழுவின் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஹுனான் கட்சிக் குழு துரித வேகத்தில் செயல்படத் தொடங்கியது. சுரங்கத் தொழிலாளிகள், ரயில்வேத் தொழிலாளிகள், நகரசபை ஊழியர்கள், அச்சகத் தொழிலாளிகள் மற்றும் அரசாங்க நாணயசாலைத் தொழிலாளிகள் ஆகியோருக்காக இருபதுக்கும் மேற்பட்ட தொழிற்சங்கங்களை கட்சி உருவாக்கியது. அவ்வாண்டு குளிர் காலத்தில் தொழிலாளர் இயக்கம் தீவிரமடையத் தொடங்கியது. கம்யூனிஸ்ட் கட்சியின் வேலை முழுவதும் மாணவர்கள் மற்றும் தொழிலாளர்களையே மையமாகக் கொண்டிருந்தது என்பதுடன் விவசாயிகள் பிரச்சினை குறித்து எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

அவ்வாண்டு நடுப்பகுதியில் ஆளுநர் ஜாவோ ஹெங்டிக்கு எதிராக ஓர் இயக்கத்தை உருவாக்குவதற்கு

உதவி செய்யும் பொருட்டு கம்யூனிஸ்ட் கட்சி, மாவோவை ஷாங்காய் நகருக்கு அனுப்பி வைத்தது. அந்தப் பணியை முடித்த பின் ஹுனானுக்குத் திரும்பிய மாவோ, தொழிற்சங்கங்களின் வேலையை முடுக்கி விட்டார். அதிக ஊதியம் கோரியும் தொழிலாளர்கள் சிறந்த முறையில் நடத்தப்பட வேண்டுமென்று கோரியும் மற்றும் தொழிற்சங்கங்களுக்கு அங்கீகாரம் போன்ற கோரிக்கைகளுக்காகவும் அவ்வாண்டு வசந்த காலத்தில் எண்ணற்ற வேலை நிறுத்தங்கள் நடைபெற்றன. அவற்றில் பெரும்பாலானவை வெற்றிகரமாக முடிவுற்றன. மே 1-ம் தேதியன்று ஹுனானில் ஒரு பொது வேலை நிறுத்தம் செய்யும்படி அறைகூவல் விடப்பட்டது. வெற்றிகரமாக நடைபெற்ற அந்த வேலைநிறுத்தமானது, சீனத் தொழிலாளி வர்க்கத்தின் முன்னெப்போதும் கண்டிராத பலத்தின் சாதனையையே குறித்தது என்றால் அது மிகையல்ல.

டாக்டர் சன்யாட் சென், சீனக்கம்யூனிஸ்ட் கட்சியின் உதவியுடன் கோமிண்டாங் கட்சியை மாற்றியமைக்க 1923-ம் வருடம் தீர்மானித்தார். கோமிண்டாங் கட்சிக்கும், கம்யூனிஸ்ட் கட்சிக்குமிடையே ஒத்துழைப்பை ஏற்படுத்தவும், கம்யூனிஸ்ட்டுகளை கோமிண்டாங் கட்சியில் சேர்க்கவும் முடிவெடுத்தார்,

சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் மூன்றாவது காங்கிரஸ் 1923-ம் ஆண்டு குவாங்சூ நகரில் நடைபெற்றது. சீனக் கம்யூனிஸ்ட் கட்சி தனியாக இயங்கிக்கொண்டே, அதே சமயத்தில் டாக்டர் சன்யாட் சென் தலைமையிலுள்ள கோமிண்டாங் கட்சியில் சேர்ந்து செயல்பட்டு, வடக்கத்திய ராணுவாதிக்கவாதிகளுக்கெதிராக ஓர் ஐக்கிய முன்னணியை உருவாக்குவது என்ற வரலாற்றுச் சிறப்பு மிக்க முடிவையும் இந்த மாநாடு எடுத்து. மாவோ அதன் பின் ஷாங்காய் நகருக்குச் சென்று கட்சியின் மத்தியக் கமிட்டியில் பணியாற்றினார்.

சன்யாட் சென் 1924-ம் ஆண்டு ஜனவரி மாதத்தில் கோமிண்டாங் கட்சியின் முதல் தேசிய மாநாட்டை காண்டன் நகரில் கூட்டினார். அதில் ரஷ்யாவுடன் உறவு வைத்துக்கொள்வது கம்யூனிஸ்ட்டுகளுடன் ஒத்துழைப்பது விவசாயிகளுக்கும், தொழிலாளிகளுக்கும், உதவி புரிவது ஆகிய மூன்று பிரதான கொள்கைகளை அவர் அறிவித்தார். இம்மாநாட்டில் மாவோ, லீ டா ஷோ (Li Ta-chao) ஆகியோரும் கலந்துகொண்டு கோமிண்டாங் கட்சியைப் புரட்சிகரப் பாதையில் நடைபோடச் செய்ய பெரிதும் பாடுபட்டனர்.

கம்யூனிஸ்ட்டுகளை, கோமிண்டாங் கட்சிக்குள் சேர்த்துக்கொண்டதானது, அக்கட்சியிலிருந்த சில தலைவர்களுக்குப் பிடிக்கவில்லை. ஆனால் சன்யாட் சென்னுடைய செல்வாக்கு கட்சிக்குள் அதிகம் இருந்ததால் அவர்கள் எதுவும் செய்ய முடியவில்லை.

மார்ச் மாதத்தில் ஷாங்காய்க்குத் திரும்பி வந்த மாவோ, கம்யூனிஸ்ட் கட்சியின் நிர்வாகக்குழு உறுப்பினராகவும், ஷாங்காய் நகர கோமிண்டாங் கட்சியின் நிர்வாகக் குழு உறுப்பினராகவும் ஆக இரண்டு வேலைகளையும்இணைத்துச் செயல்பட்டார்.

அவ்வாண்டு குளிர்காலத்தில் மாவோ, ஷாங்காயில் நோய்வாய்ப்பட்டார். சிறிது ஓய்வு எடுப்பதற்காக ஹுனானுக்குத் திரும்பி வந்தார். ஓய்வெடுத்துக் கொண்டே அந்த மாநிலத்தின் மகத்தான விவசாய இயக்கம் உருப்பெறுவதற்கான அடித்தளத்தையும் அமைத்தார். மாவோ கூறுகிறார்: ''விவசாய மக்களிடையே உள்ள வர்க்கப் போராட்ட வீச்சு எந்த அளவு இருக்குமென்று இதற்கு முன்பு நான் முற்றிலும் உணர்ந்ததில்லை. ஆனால் மே, 30-ம் தேதி (1925) சம்பவத்திற்குப் பின், அதைத் தொடர்ந்து ஏற்பட்ட மகத்தான அரசியல் நடவடிக்கை அலையில் ஹுனான் விவசாய மக்கள் தீரமிக்க போராட்டக்காரர்களாக

மாறினர். வீட்டில் ஓய்வு எடுத்துக்கொண்டிருந்த நான் அங்கிருந்து கிளம்பி கிராமங்களில் ஸ்தாபனத்தை அமைப்பதற்கான பிரசார இயக்கத்தைத் தொடக்கி னேன். ஒருசில மாதங்களுக்குள் இருபதுக்கும் மேற்பட்ட விவசாய சங்கங்களை அமைக்க முடிந்தது. இதைக் கண்டு ஆத்திரமடைந்த நிலப்பிரபுக்கள் என்னைக் கைது செய்யவேண்டுமென்று கூக்குரலிட்டனர். உடனேயே ஆளுநர் ஜாவோ ஹெங்டி என்னைக் கைது செய்வதற் காகப் படைகளை அனுப்பினான். நான் அங்கிருந்து குவாங்சூ நகருக்குத் தப்பி ஓடினேன்.''

கோமிண்டாங் கட்சியின் நிறுவனர் சன்யாட் சென், பீகிங் நகரில் மரணமடைந்ததைத் தொடர்ந்து சியாங்கே சேக் முதல் பிரிவு ராணுவத்தின் தளபதியாக ஆக்கப்பட்டான்.

கோமிண்டாங் கட்சியின் அரசியல் இலாகா வெளிட்டுவந்த ''அரசியல் வார இதழ்'' என்ற இதழின் ஆசிரியராக மாவோ பணியாற்றினார். அத்துடன் விவசாயஇயக்கத்திற்கான அமைப்பாளர்களுக்குப் பயிற்சி அளிக்கும் பொறுப்பும் மாவோவுக்கு அளிக்கப்பட்டது. மாவோ இதற்காக ஒரு பயிற்சித் திட்டத்தை உருவாக் கினார். இந்தத் திட்டத்தில் மங்கோலியாவின் மாணவர்கள் உள்ளிட்டு சீனாவின் 21 மாநிலங்களைச் சேர்ந்த பிரதிநிதிகள் கலந்துகொண்டனர். மாவோ, கோமிண்டாங் கட்சியின் கிளர்ச்சிப் பிரசாரப் பிரிவின் தலைவராக நியமிக்கப்பட்டார் என்பதுடன் அந்தக் கட்சியின் மத்தியக் கமிட்டிக்கான பரிட்சார்த்த உறுப் பினராகவும் நியமிக்கப்பட்டார். அந்த கோமிண்டாங் கட்சியின் விவசாயப் பிரிவின் தலைவராகவும் ஸ்தாபனப் பிரிவின் தலைவராகவும் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந் தவர்கள்தான் செயல்பட்டுவந்தனர்.

விவசாயிகள் பிரச்சினை குறித்து மாவோ தொடர்ந்து எழுதினார் என்பதுடன் கம்யூனிஸ்ட் கட்சி விவசாயி

களிடையே செய்யவேண்டியிருந்த வேலைக்கும் அவர் விசேஷப் பொறுப்பு ஏற்றுக்கொண்டார். ஹுனான் விவசாயிகளிடையே வேலை செய்து அவர்களுடைய பிரச்சினைகளை அவர் ஆராய்ந்து. ஸ்தாபன ரீதியாக அவர்களை அணிதிரட்டியதில் கிடைத்த அனுபவ மானது, இரண்டு சிறந்த பிரசுரங்கள் எழுதுவதற்கான வாய்ப்பை அவருக்கு அளித்தது, ''சீன சமூகத்தில் பல்வேறு வர்க்கங்கள் குறித்த ஒரு பகுப்பாய்வு'' என்ற பிரசுரம், கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையின்கீழ் ஒரு தீவிரமான நிலச்சீர்திருத்தக் கொள்கையையும் விவசாய மக்களுக்கான ஒரு வலுவான அமைப்பையும் வலியுறுத் தியது. ''ஒரு புரட்சிகரமான கட்சியே மக்களுக்கு வழி காட்டியாக இருக்க முடியும். புரட்சிக்குத் தலைமை தாங்குகிற புரட்சிகரக் கட்சி நாசமாகுமானால் எந்தப் புரட்சியும் வெற்றியடைய முடியாது. நம்முடைய புரட்சி நாசத்திற்குக் கொண்டு செல்லாமல் சாதகமான வெற்றியை உறுதி செய்ய வேண்டுமென்றால் நம் முடைய உண்மையான எதிரிகளைத் தாக்கும்பொருட்டு நம்முடைய உண்மையான நண்பர்களை ஒன்றுபடுத்து வதில் நாம் கவனம் செலுத்த வேண்டும். நம்முடைய உண்மையான எதிரிகளிடமிருந்து நம்முடைய உண்மை யான நண்பர்களைத் தரம்பிரித்துப் பார்க்க சீன சமூகத் தின் பல்வேறு வர்க்கங்களின் பொருளாதார அந்தஸ்து குறித்த ஒரு பொதுப் பகுப்பாய்வைச் செய்வதுடன் புரட்சி குறித்து இந்தப் பல்வேறு வர்க்கங்களின் அணுகு முறையையும் நாம் ஆய்வு செய்ய வேண்டும்'' என்று கூறிய மாவோ, தன் நிர்ணயிப்பைப் பின்வருமாறு விளக்குகிறார்:

''பொருளாதார ரீதியாகப் பின்னடைந்துள்ளதும் அரைக்காலனி நாடுமான சீனாவில், தங்களுடைய வாழ்க்கைக்காகவும் வளர்ச்சிக்காகவும் ஏகாதிபத்தியத் தைச் சார்ந்துள்ள நிலப்பிரபுத்துவ வர்க்கமும், தரகு

முதலாளித்துவ வர்க்கமும் சர்வதேச முதலாளித்துவ வர்க்கத்தின் அடிவருடிகளாக உள்ளன. இந்த வர்க்கங்கள் சீனாவின் மிகவும் பின்தங்கிய, மிகவும் பிற்போக்கான உற்பத்தி உறவுகளைப்ப பிரதிநிதித்துவப்படுத்துகின்றன என்பதுடன் சீனாவின் உற்பத்தி சக்திகளின் வளர்ச்சிக்கு இடையூறாகவும் இருந்தன. எனவே சீனப் புரட்சியின் லட்சியங்களுக்கு இவ்விரு வர்க்கங்களும் ஏற்புடயவை அல்ல.

"நடுத்தர வர்க்கம் என்பது சீனாவில் முதலாளித்துவ உற்பத்தி உறவுகளைப் பிரதிநிதித்துவப்படுத்துகின்றது. அது அன்னிய மூலதனத்தினால் தாக்கப்படும்பொழுதும், யுத்த பிரபுக்களினால் ஒழுக்கப்படும்போதும் புரட்சி தேவை என்று கருதுகிறது. ஏகாதிபத்தியம், மற்றும் யுத்த பிரபுக்களுக்கெதிரான புரட்சிகர இயக்கத்தை ஆதரிக்கிறது. ஆனால் உள்நாட்டுப் பாட்டாளி வர்க்கம் புரட்சியில் ஒரு தீரமிக்க பங்கு வகிப்பதையும் அதற்கு சர்வதேச பாட்டாளி வர்க்கம் ஆதரவு தருவதையும் கண்டு இந்த நடுத்தர வர்க்கம் பயப்படுகிறது. தன்னை ஒரு பெரு முதலாளித்துவ வர்க்க அந்தஸ்துக்கு உயர்த்திக்கொள்ள வேண்டுமென்று விரும்பும் இந்த நடுத்தர வர்க்கம், புரட்சி குறித்து அவநம்பிக்கை கொள்கிறது. அரசியல் ரீதியாகப் பார்க்கும்பொழுது அது தேசிய முதலாளித்துவ வர்க்கம் என்ற ஒரு தனி வர்க்கத்தின்கீழ் அரசாங்கம் அமைக்கப்பட வேண்டுமென்று விரும்புகிறது.

"குட்டி முதலாளித்துவ வர்க்கத்தினர் குறித்து மிகுந்த கவனம் செலுத்தவேண்டும். நடுத்தர விவசாயிகள், கைவினைஞர்கள், சிறு அறிவுஜீவிகள் ஆகியோர் இதில் அடங்குவர். மாணவர்கள், ஆரம்ப, மற்றும் நடுத்தரப் பள்ளி ஆசிரியர்கள், இளநிலை அரசாங்க ஊழியர்கள், அலுவலக எழுத்தர்கள், சிறிய வழக்கறிஞர்கள் மற்றும் சிறிய வர்த்தகர்கள் ஆகியோர் இந்தச் சிறிய அறிவுஜீவிகளில் அடங்குவர். இவர்களின்

எண்ணிக்கை மற்றும் வர்க்கத் தன்மை காரணமாக இந்த வர்க்கம் குறித்து அதிக கவனம் செலுத்த வேண்டும்.

''அடுத்து வருவது அரைப்பாட்டாளி வர்க்கம். இது ஐந்து பிரிவுகளைக் கொண்டது. (1) அரைக் குத்தகை விவசாயிகளில் மிகப் பெரும் பகுதியினர். இவர்கள் தங்களுடைய சிறிய நிலத்திலும் பாடுபட்டுக்கொண்டு அதே சமயத்தில் மற்றொருவருடைய துண்டு நிலத்திலும் குத்தகை செலுத்திப் பாடுபடுபவர். (2) ஏழை விவசாயிகள். (3) கைவினைஞர்கள். (4) வர்த்தக ஊழியர்கள். (5) சிறிய மூலதனத்தில் தெருக்களில் கடைபோட்டு வியாபாரம் செய்யவோ. இந்த ஐந்து பிரிவினரும் தன்மையில் வேறுபட்டிருப்பினும் புரட்சிக்கு வந்தே தீர வேண்டியவர்கள், கட்டாயம் கொண்டு வரப்பட வேண்டியவர்கள்.

''அடுத்து வருவது சீனாவின் நவீன ஆலைப் பாட்டாளி வர்க்கம். இதன் எண்ணிக்கை இருபது லட்சமாகும். இவர்களில் பெரும்பாலோர் ரயில்வே, சுரங்கம், கப்பல் தொழில், துணி ஆலைகள் மற்றும் கப்பல் கட்டும் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்கள். இந்த ஆலைப் பாட்டாளி வர்க்கமானது எண்ணிக்கையில் சிறிதாக இருந்தபோதிலும், சீனாவின் புதிய உற்பத்தி சக்திகளின் பிரதிநிதியாகவும் நவீன சீனாவின் மிகவும் முற்போக்கான வர்க்கமாகவும் இருப்பதுடன் சீனாவின் புரட்சிகர இயக்கத்திற்குத் தலைமை தாங்கிச் செல்லும் சக்தியாகவும் விளங்குகிறது.

''அடுத்தது கிராமப்புறப் பாட்டாளி வர்க்கம். இவர்களுக்கு நிலமோ, உழுபடைக் கருவிகளோ, அல்லது பணமோ எதுவும் கிடையாது. தாங்கள் உயிர் வாழ்வதற்குத் தங்களுடைய உழைப்பு சக்தியை விற்க வேண்டியவர்கள். மோசமான நிலைமைகளில் அதிக நேரம் உழைத்து, குறைந்த ஊதியம் பெற்று உயிர்வாழ

வேண்டியவர்கள். கிராமத்தில் மிகுந்த சிரமத்துடன் வாழ்கின்ற இந்தப் பகுதியினர் விவசாயிகள் இயக்கத்தில் ஏழை விவசாயிகளைப் போன்றே முக்கியத்துவம் வாய்ந் தவர்களாவர்.

''அடுத்து வருவோர் உதிரிப் பாட்டாளிகள். நிலத்தை இழந்த விவசாயிகளும் வேலை வாய்ப்பை இழந்த கைவினைஞர்களும் இவர்களில் அடங்குவர். இவர்கள் நிலையற்ற வாழ்க்கை வாழ்பவர்கள்; பல்வேறு இடங்களில் ரகசிய அமைப்புகளை வைத்திருப் பவர்கள். தீரமாகப் போராடுவார்கள்; ஆனால் நாசகர மான வேலைகளையும் செய்வார்கள். அவர்களுக்கு முறையாக வழிகாட்டப்பட்டால் அவர்கள் புரட்சிகர சக்தியாக முடியும்.''

இவ்வாறு சீனாவின் ஒவ்வொரு வர்க்கத்தையும் பகுப்பாய்வு செய்த பின் மாவோ பின்வரும் தொகுப் புரையை அளிக்கிறார்:

''ஏகாதிபத்தியத்துடன் இணைப்பு கொண்ட நிலப் பிரபுக்கள், அதிகார வர்க்கம், தரகு முதலாளிகள், பெரும் நிலப்பிரபுக்கள் மற்றும் அவர்களைச் சார்ந்துள்ள அறிவு ஜீவிகளின் பிற்போக்குப் பகுதியினர் ஆகியோர் நமது எதிரிகளாவர். ஆலைப் பாட்டாளி வர்க்கம் என்பது தான் நமது புரட்சிக்குத்தலைமை தாங்கும் சக்தி. அரைப் பாட்டாளி வர்க்கம் மற்றும் குட்டி பூர்ஷ்வா வர்க்கத்தின் அனைத்துப் பகுதியினரும் நம்முடைய நண்பர்கள்; ஊசலாட்டமுள்ள நடுத்தர வர்க்கத்தைப் பொருத்த வரை அதனுடைய வலதுசாரிப் பகுதி நமது எதிரியாக மாறி, அதனுடைய இடதுசாரிப் பகுதி நமது நண்ப ராகலாம்; எனினும் அந்த இடதுசாரிப் பகுதி குறித்து நாம் தொடர்ந்து எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்பதோடு நமது அணியில் குழப்பம் விளைவிக்க அதை அனுமதிக்கவும் கூடாது.''

1926-ம் ஆண்டு மார்ச் மாதத்தில் மாவோ எழுதிய இந்தக் கட்டுரைதான் மார்க்சியப் பார்வையில் சீன நிலைமை குறித்து எழுதப்பட்ட முதல் கட்டுரையாகும்.

சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் பெரிய தலைவர்களுள் ஒருவரான சென் டு ஸு இந்தக் கட்டுரையின் கருத்தை எதிர்த்ததோடு அதைக் கட்சியின் பத்திரிகையில் பிரசுரிக்கவும் மறுத்துவிட்டார். எனவே, அது, பின்னர் குவாங்சூவிலிருந்து வெளிவந்த ''விவசாயிகள் மாத இதழ்'' என்ற பத்திரிகையிலும் ''சீன இளைஞர்கள்'' என்ற பத்திரிகையிலும் வெளியானது.

மாவோ 1926-ம் ஆண்டு மார்ச் மாதம் வரை குவாங்சூவிலிருந்து கோமிண்டாங் கட்சி வேலைகளையும் தொடர்ந்து செய்துவந்தார். சன்யாட்சென் மறைவுக்குப் பிறகு கோமிண்டாங் கட்சியின் மத்தியக் கமிட்டிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட சியாங்கெசேக் அந்த மாதத்தில்தான் கம்யூனிஸ்ட்டுகளுக்கு எதிராக ஒரு சதி வேலையை நடத்தினான். ஏகாதிபத்தியவாதிகளின் கையாளாக மாறிய சியாங் கே சேக் ஒரு போலித்தனமான நாடகத்தை சிருஷ்டித்து தேசியப் புரட்சிப் படையின் முதல் ராணுவத்தின் தலைவனானான். சூ என் லாயையும் இதர கம்யூனிஸ்ட் உறுப்பினர்களையும் கைது செய்தான். முதல் ராணுவத்திலிருந்து அவர்களை வாபஸ் பெறும்படி நிர்ப்பந்தித்து தலைமையைக் கைப்பற்றினான்.

கோமிண்டாங் கட்சியில் வலதுசாரி, இடதுசாரிப் பிரிவுகளிடையே சமரசம் ஏற்பட்ட பின்னர் கோமிண்டாங்—கம்யூனிஸ்ட் கட்சியினரிடையே ஒருமைப்பாடு ஏற்கபட்டது. அதன் பின் 1926-ம் ஆண்டு வசந்த காலத்தில் மாவோ ஷாங்காய்க்குச் சென்றார். அங்கே கம்யூனிஸ்ட் கட்சியின் விவசாயப் பிரிவுக்குப் பொறுப்பேற்று வழிகாட்டிவந்தார். பின்னர் அங்கிருந்து ஹுனா

னுக்குச் சென்றார். அங்கு அவருக்கு விவசாயிகள்இயக்கத் தைப்பரிசோதிக்கும்வேலைதரப்பட்டது. ஹுனான் மாநிலத்தின் ஐந்து மாவட்டங்களில் விவசாயிகளின் அமைப்புகளையும் அரசியல் நிலைமைகளையும் மாவோ ஆராய்ந்தார். அதன்பின் விவசாயிகள் இயக்கத்தில் ஒரு புதிய வழியைப் பின்பற்ற வேண்டுமென்று மத்தியக் கமிட்டிக்கு தனது அறிக்கையை அவர் சமர்ப்பித்தார். அங்கிருந்து வூஹான் (Wuhan) என்ற இடத்திற்கு மாவோ சென்றார். அங்கே பல மாநிலங்களைச் சேர்ந்த விவசாயிகளின் கூட்டம் ஒன்று நடைபெற்றது. மாவோ அதில் கலந்துகொண்டு, பரந்த அளவு மறு நில விநியோகம் செய்யக்கோரும் சிபாரிசுகளை உள்ளடக்கிய அவருடைய அறிக்கை குறித்து விவாதித்தார். கம்யூனிஸ்ட் கட்சியின் 5-வது மாநாட்டில் மாவோவின் ஆலோசனைகளை முன்வைக்க வேண்டும் என்ற தீர்மானத்தை இந்தக் கூட்டம் நிறைவேற்றியது. ஆனால் கட்சியின் மத்தியக் குழு இந்த ஆலோசனைகளை நிராகரித்துவிட்டது.

இதே சமயத்தில் கோமிண்டாங் கட்சியில் தன் பிடியை வலுப்படுத்திக்கொண்ட சியாங் கே சேக் கம்யூனிஸ்ட்டுகளைப் படிப்படியாக ஒழித்துக்கட்டத் தீர்மானித்தான். 1926-ம் ஆண்டு மே 15-ம் தேதியன்று நடைபெற்ற கோமிண்டாங் கட்சியின் மத்தியக் குழுக் கூட்டத்தில் ''கட்சி விவகாரங்களை மாற்றி அமைப்பதற்கான திட்டம்'' என்ற பெயரில் ஒரு திட்டத்தை சியாங்கே ஷேக் முன்வைத்தான். கோமிண்டாங்கட்சியின் உயர்நிலை ஸ்தாபன நிர்வாகப் பதவிகளில் மூன்றில் ஒரு பங்கிற்குமேல் கம்யூனிஸ்ட்டுகள்இருக்கக்கூடாது மத்தியப் பிரிவுகளின் இயக்குநர்களாக கம்யூனிஸ்ட்டுகளை நியமிக்கக் கூடாது; கோமிண்டாங் கட்சி உறுப்பினர் எவருமே கம்யூனிஸ்ட் கட்சியில் சேருவதற்கு அனுமதிக்கப்படக் கூடாது; கோமிண்டாங் கட்சியில் உறுப்பினராக இருக்கும் கம்யூனிஸ்ட்டுகளின் பட்டியல் கோமிண்டாங்

தலைவர்களிடம் ஒப்படைக்கப்பட வேண்டும் என்பதே அந்த திட்டம்.

இந்த நிலையில் 1927-ம் ஆண்டு மே மாதத்தில் ஊஹான் நகரில் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் 5-வது மாநாடு நடைபெற்றது. கட்சியில் ஆதிக்கம் செலுத்தி வந்த சென் டூ ஸு, வலது சந்தர்ப்பவாத குட்டி முதலாளித்துவக் கொள்கையைப் பின்பற்றினார். ஷாங்காயிலும், நான்சிங்கிலும் கம்யூனிஸ்ட் கட்சிக்கெதிராக சியாங்கே-சேக் எதிர்ப்புரட்சி நடவடிக்கை எடுத்தபோதிலும், சென் டூ ஸு அவனுடன்சமரம்செய்து கொள்ளும் கொள்கையையே பின்பற்றினார். சென்டூஸுவின் ஆதிக்கத்திலிருந்த கட்சியின் மத்தியக் குழு, மாவோவினால் முன்வைக்கப்பட்ட விவசாயிகள் நிலைமை குறித்த ஆய்வை மாநாட்டில் விவாதத்திற்கு வைக்க மறுத்துவிட்டது. நிலப் பிரச்சினை குறித்து ஒரு தவறான முடிவை எடுத்தது.

இந்த மாநாட்டிற்குப் பின் அகில சீன விவசாயிகள் சங்கம் உருவாக்கப்பட்டது. மாவோ அதன் முதல் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

# வீறுகொண்டெழுந்த விவசாயிகள் இயக்கம்

1927-ம் ஆண்டு வசந்த காலத்தில் ஹூபெய், ஜியாங்சி, பூஜியன் முதலிய மாநிலங்களிலும் அதிலும் குறிப்பாக ஹூனான் மாநிலத்திலும் விவசாயிகள் இயக்கம் வீறுகொண்டு எழுந்தது. கம்யூனிஸ்ட் கட்சி சிரத்தையற்று இருந்த போதிலும், கோமிண்டாங் கோஷ்டியினர் ஒடுக்குமுறையைக் கையாண்டபோதும் இந்த இயக்கம் போர்க்குணம் வாய்ந்ததாக விளங்கியது. விவசாயிகள் சங்கம் என்பது 'பொறுக்கிப் பயல்களின் சங்கம்' என்றும் அதனுடைய கோரிக்கைகளும் நடவடிக்கைளும் அதீதமானவை என்றும் உயர் அதிகாரிகளும், ராணுவ அதிகாரிகளும் வர்ணித்து அதை ஒழித்துக்கட்ட வேண்டுமென்று கூறினர். நடந்த நிகழ்ச்சிகளுக்கெல்லாம் மாவோதான் காரணம் என்று கூறி அவருடைய கருத்துக்களை தீவிரமாக எதிர்த்து வந்த சென்டூஸூ மாவோவை ஹூனானிலிருந்து திருப்பி வரும்படி கூறினார்.

ஏப்ரல் மாதத்தில் நான்சிங்கிலும் ஷாங்காயிலும் எதிர்ப்புரட்சி இயக்கம் துவங்கியது. சியாங் கே சேகின் தலைமையின்கீழ் ஒரு கொலை வெறித் தாண்டவம் துவங்கியது. தொழிலாளிகள் கூட்டம் கூட்டமாக கொல்லப்பட்டனர். குவாங்சூவிலும் இதே கொலை வெறித்தாண்டவம் நடைபெற்றது. ஹூனான் மாநிலத்திலுள்ள ஜூ-கே ஜிங் [ZUKEZiNG] என்ற இடத்தில் ஒரு பெரும் எழுச்சி நடைபெற்றது. அதைத் தொடர்ந்து

ஏராளமான விவசாயிகளும், தொழிலாளிகளும் பிற்போக்காளர்களால் கொல்லப்பட்டனர். இதன் பின் ஊஹானிலிருந்த இடது கோமிண்டாங்காரர்கள், கம்யூனிஸ்டுகளுடனான உடன்படிக்கையை ரத்து செய்து அவர்களை அந்தக் கட்சியிலிருந்து வெளியேற்றி விட்டதாக அறிவித்தனர்.

இத்தகைய நிலைமை உருவானதைக் கண்ட கட்சி, தனது தலைவர்களுக்கு ஒரு கட்டளை இட்டது. அவர்கள் ரஷ்யாவிற்கோ அல்லது ஹாங்காங்கிற்கோ அல்லது பாதுகாப்பான இடங்களுக்கோ செல்லும்படி கட்டளையிட்டது. சிசுவானுக்கு செல்லும்படி மாவோவிற்கு உத்தரவிடப்பட்டது. ஹூனான் மாநில காரியதரிசியாக நியமித்து தன்னை ஹூனானுக்கு அனுப்பும்படி மாவோ சென்டூஸூவைக் கேட்டுக் கொண்டார். அதன்படி ஹூனானுக்கு அனுப்பப்பட்ட மாவோ, பத்து நாட்களுக்குப்பின், உடனடியாக திரும்பி வரும்படி அழைக்கப் பட்டார்; ஊஹானில் தலைமைப் பொறுப்பில் இருந்த டாங் என்பவருக்கெதிராக எழுச்சியை உருவாக்கியதாக மாவோ மீது குற்றம் சுமத்தப்பட்டது. கம்யூனிஸ்ட் கட்சியில் குழப்பமான நிலை ஏற்பட்டது. கிட்டத்தட்ட அனைவருமே சென்டூஸூவின் தலைமையையும் அவருடைய சந்தர்ப்பவாத வழியையும் எதிர்க்கத் துவங்கினர். இது அவருடைய வீழ்ச்சிக்கு வழிவகுத்தது.

1927ம் வருடம் ஆகஸ்ட் 1ம் தேதியன்று 20ம் எண் ராணுவமும் 11ம் எண் ராணுவத்தின் 24ம் பிரிவும் சேர்ந்து கம்யூனிஸ்டான சூடேயின் ஒத்துழைப்புடன் நான்சிங்கில் வரலாற்றுப் பிரசித்தி பெற்ற எழுச்சியை உருவாக்கின. சூ-என்-லாய் இந்த எழுச்சியின் பிரதான தலைவராவார். இந்த எழுச்சியானது பின்னாட்களில் செஞ்சேனை உருவாக்குவதற்கான துவக்கமாக அமைந்தது.

இதைத் தொடர்ந்து ஆகஸ்ட் 7ம் தேதியன்று கம்யூனிஸ்ட் கட்சி மத்தியக் குழுவின் ஒரு விரிவுபடுத்தப்பட்ட கூட்டம் நடத்தப்பட்டது. இந்தக் கூட்டத்தில் சென்டூஸு செயலாளர் பதவியில் இருந்து அகற்றப்பட்டார். இவரை பதவியிலிருந்து அகற்றியதால் அரசியல் தலைமைக்குழு உறுப்பினரான மாவோவுக்கு ஒரு பெரும் பங்கு உண்டு. கோமிண்டாங் கட்சி ஏற்கெனவே ஏகாதிபத்தியத்தின் கருவியாக மாறத் தொடங்கிவிட்டதால் அது ஜனநாயகப் புரட்சிக்கான கடமைகளை செயல்படுத்த முடியாது; அதனுடன் கூட்டு வைத்துக் கொள்ள வேண்டுமென்ற எண்ணம் தற்சமயத்துக்கு கைவிடப்பட்டது. எனவே சீனக் கம்யூனிஸ்ட் கட்சி ஒரு புதிய வழியை உருவாக்கியது. இதன்மூலம் சீனாவல் அதிகாரத்தைப் பிடிப்பதற்கான பகிரங்கப் போராட்டத்தை சீனக் கம்யூனிஸ்ட் கட்சி துவக்கிவிட்டது.

இந்த இயக்கத்தை உருவாக்கும் பொருட்டு மாவோ செங்ஷாவிற்கு அனுப்பப்பட்டார். அங்கு சென்ற மாவோ ஐந்து அம்சங்களைக் கொண்ட ஒரு செயல்திட்டத்தை முன்வைத்தார். மாநில கம்யூனிஸ்ட் கட்சியானது, கோமிண்டாங் கட்சியுடனுள்ள உறவை முற்றிலுமாக துண்டித்து கொள்வது, விவசாயி தொழிலாளி புரட்சிகர ராணுவத்தை உருவாக்குவது, சிறிய நடுத்தர மற்றும் பெரிய நிலப்பிரபுக்களின் சொத்துக்களை கைப்பற்றுவது கோமிண்டாங் கட்சியோடு எவ்வித தொடர்புமில்லாமல் ஹுனானில் கம்யூனிஸ்ட் கட்சியே அரசாங்கத்தை உருவாக்குவது மற்றும் தொழிலாளி விவசாயி ராணுவத்தினரின் பிரதிநிதிகளைக் கொண்ட சோவியத்துக்களை உருவாக்குவது என்று அந்த திட்டம் கூறியது.

ஹுனானில் விவசாயிகள் சங்கம் மூலம் பரந்த அளவிலான எழுச்சியை உருவாக்குவதில் கம்யூனிஸ்ட் கட்சி வெற்றி பெற்றது. விவசாயி — தொழிலாளி ராணுவத்தின் முதல் குழுக்கள் உருவாக்கப்பட்டன. விவசாய மக்கள், சுரங்கத் தொழிலாளிகள், கோமிண்டாங்

படையிலிருந்து கிளர்ச்சி செய்து வருபவர்கள் ஆகியவரி டையே இருநது இந்த ராணுவத்திறகு ஆள் எடுக்கப் பட்டனர். புரடசியின் ஆரம்ப ராணுவப்படையான இதற்கு ''விவசாயிகள் — தொழிலாளிகள் ராணுவத்தின் முதல் பிரிவு'' என்று பெயரிடப்பட்டது. இந்த ராணுவ மானது ஹுனான் மாநிலக் குழுவின் அனுமதியுடன் உருவாககப்பட்டதாகும். ஹுனான் மாநிலக்குழு மறறும் முதல் பிரிவு ராணுவததின் பொதுவான திட்டத்தை கட்சி யின் மத்தியக் குழு எதிர்த்தது. தீவிரமான நடவடிக் கையை விட சற்று பொறுததிருந்து பார்ப்பது என மத்தியக் குழு திட்டமிட்டிருந்தது.

இந்த சமயத்தில் மாவோ ஒரு பெரும் ஆபத்தில் மாட்டிக் கொண்டார். ஒரு நாள் அவர் ஹன்யாங என்ற இடத்திலுள்ள சுரங்கத் தொழிலாளிகளைச் சந்திதது விட்டுத் திரும்பும்போது கோமிண்டாங் படையைச் சேர்ந்தவர்களால் பிடிக்கப்பட்டார். அச்சமயத்தில் கோமிண்டாங் வன்முறை பயங்கரமாக இருந்தது. கம்யூ னிஸ்டுகள் என்று சந்தேகப்படுகிற நூற்றுக்கணக் கானோர் உடனுககுடன் சுட்டுக் கொல்லப்பட்டனர், இபபோது மாவோவையும் சுட்டுக் கொல்வதற்காக அவர்களுடைய தலைமை நிலையத்துக்கு அவரை இழுததுச் சென்றனர். மாவோ வழியிலிருந்த தோழர் ஒருவரிடம் சிறிது டாலர் பணத்தை கடன் வாங்கி இவரை கொண்டு செல்கிற காவலாளிகளுக்கு லஞ்சமாகக் கொடுத்து தப்பிக்க முயன்றார். கூலிப்படையின ரான அந்த சாதாரண சிப்பாய்கள் அவரை விடுதலை செய்ய சம்மதித்தனர். ஆனால் அந்தக் காவலாளிகளின் தலைவன் அதற்கு சம்மதிக்கவில்லை. மாவோ தப்பியோட நினைத்தார். ஆனால் வழியே இல்லை, அந்த ராணுவத் தலைமையகத்துக்கு 200 கெஜ தூரம் இருக்கும்போது மாவோ அருகிலிருந்த வயலில் குதித்து ஓடி அங்கிருந்த குளத்தின் முகட்டில் ஏறினார். சிப்பாய்கள் இவரை துரத்திக் கொண்டே வந்தனர்.

அவரைத் தேடும்படி சில விவசாயிகளையும் நிர்பந்தித்தனர். அந்த மேட்டுப் பகுதியின் ஒரு புறத்தில் அடர்த்தியாக வளர்ந்திருந்த கோரைப் புற்களின் நடுவே மாவோ ஒளிந்து கொண்டார். மாவோவுக்கே தான் தப்புவோம் என்ற நம்பிக்கை குறைந்து போயிற்று. இந்த நிலைமை இருட்டும் வரை நீடித்தது. இருட்டியவுடன் அந்தச் சிப்பாய்கள் அவரைத் தேடுவதை நிறுத்தினர். மாவோ அங்கிருந்து மெதுவாக தப்பிச்சென்று இரவு முழுவதும் நடந்து மலைப்பகுதியை கடந்துச் சென்றார். காலில் செருப்பில்லாமல் நடந்ததால் கல்லும் முள்ளும் குத்தி பாதங்கள் புண்ணாகியிருந்தன. அடுத்த நாள் சாலையில் சென்ற ஒரு விவசாயியைச் சந்தித்து அவனை நண்பனாக்கிக் கொண்டார். அந்த விவசாயி தங்குவதற்கு இடம் கொடுத்து உபசரித்ததுடன் அடுத்த மாவட்டத்திற்கு மாவோவை அழைத்துச் சென்றார். அச்சமயத்தில் மாவோவிடம் ஏழு டாலர் பணமிருந்தது. அதைக் கொண்டு செருப்பையும், குடையையும், சிறிது உணவையும் வாங்கிக் கொண்டார். பின்னர் ஒருவாறு தன்னுடைய தலைமையகத்துக்கு வந்து சேர்ந்தார்.

புதிய ராணுவப் பிரிவு உண்டாக்கப்பட்டதைத் தொடர்ந்து, மாவோ முதல் ராணுவப் பிரிவு கட்சி, முன்னணிக் கமிட்டியின் தலைவர் ஆனார், இலையுதிர் கால அறுவடை பேரெழுச்சித்திட்டம் என்ற விவசாய எழுச்சிக்குத் தலைமை வகித்த இந்த ராணுவமானது ஹுனான் வழியாக தெற்கு நோக்கித் தன் பயணத்தைத் தொடர்ந்தது. வழியில் ஆயிரக்கணக்கான கோமிண்டாங் துருப்புக்களுடன் மோதவேண்டியிருந்தது. மோதல்களின் போது பல சமயங்களில் பின்னடைவுகளைச் சந்திக்க நேரிட்டது. இந்த ராணுவத்தில் கட்டுப்பாடு குறைவாக இருந்தது. அரசியல் பயிற்சி மிகவும் மட்டமாக இருந்தது என்பதுடன் பொறுப்பாளர்களிலும் சிப்பாய்களிலும் சில ஊசலாட்டமான நபர்கள் இருந்தனர். முதல் ராணுவத்

தின் தளபதியான யூ-சாடு என்பவன் சியாங்கேசேக்குடன் சேர்ந்து கொண்டான். அவன் ஓடிப்போன பின் இந்த புரட்சிப்படை மாற்றி அமைக்கப்பட்டது. இந்தப் படையானது ஜிங்காங்சன் மலை உச்சியை அடைந்த போது ஓராயிரம் பேரே மிஞ்சினர். இந்த ஜிங்காங்சன் மலைத் தொடரானது 40கிலோ மீட்டர் அகலமும் 250 கிலோ மீட்டர் சுற்றளவும் கொண்டது, 5 குறுகிய பாதைகள் வழியாக மட்டுமே அதற்குள் செல்ல முடியும். உயர்ந்த மலைச்சிகரங்களும் அடர்ந்த காடுகளும் சூழப்பட்ட நிலையில் இருந்த அந்த மலைத்தொடர் அன்று புரட்சிப் படைகளுக்கு மிகுந்த பாதுகாப்பாக இருந்தது.

இந்த இலையுதிர்கால அறுவடை பேரெழுச்சித் திட்டம், கட்சியினுடைய மத்தியக் குழுவின் அனுமதி பெறாததாலும், முதல் ராணுவம் கடுமையான இழப்பிற்கு ஆளானதாலும், நகர நிலைமையிலிருந்து பார்க்கும்போது இந்த இயக்கம் தோல்வி அடைந்து விட்டது போல் தோன்றியதாலும் கட்சியின் மத்தியக் குழு மாவோவைக் கண்டித்தது. அவரை அரசியல் தலைமைக் குழுவிலிருந்தும், கட்சியின் ராணுவப் பிரிவு குழுவிலிருந்தும் டிஸ்மிஸ் செய்தது. மாவோ தலைமை தாங்கிய இயக்கம் ''துப்பாக்கி இயக்கம்'' என்று ஹுனான் மாநிலக்குழுவிமர்சித்தது. ஆனால் மாவோவும் அவருடன் இருந்த தோழர்களும் தாங்கள் சரியான வழியிலேயே போகிறோம் என்று உணர்ந்தார்கள். முதல் ராணுவத்தை உறுதியாக வைத்திருந்தார்கள். புதிய நபர்களை அதில் சேர்த்து அதை முழுமையாக்கினார்கள்.

1927 நவம்பர் மாதத்தில் ஹுனான் எல்லையோரத்திலுள்ள சாலிங் என்ற கிராமத்தில் முதல் சோவியத் உருவாக்கப்பட்டது. முதல் சோவியத் அரசாங்கம் தேர்ந்தெடுக்கப்பட்டது. படிப்படியான, ஆனால் தொடர்ந்த வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட நிதானமான கொள்கையின் அடிப்படையில் ஒரு ஜனநாயகத்

திட்டத்தை மாவோ தலைமையில் இருந்தவர்கள் முன் வைத்தனர், கட்சியிலிருந்த சில பேர்வழிகள் ஒரு பயங்கர வாதக் கொள்கையை கடைப்பிடிக்க வேண்டுமென்று கோரினார்கள்; நிலப்பிரபுக்களுடைய துணிச்சலை ஒடுக்கும் பொருட்டு அவர்களுடைய வீடுகள் கொள்ளை அடிக்கப்பட வேண்டும் என்றும், வீடுகள் எரிக்கப்பட வேண்டும் என்றும் அவர்கள் கொல்லப்படவேண்டும் என்றும் கோரினார்கள். ஆனால் முதல் ராணுவத்தின் முன்னணிக் குழு இத்தகைய யுக்திகளை ஏற்க மறுத்தது. இதனால் ஆத்திரமடைந்த அந்தப் பேர்வழிகள், மாவோ வையும் இதரர்களையும் சீர்திருத்தவாதிகள் என்று கூறினர்; தீவிரமான கொள்கையை அமுலாக்க மாவோ மறுக்கிறார் என்று கூறி அவர்மீது வசை பாடினர்.

1928ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் சூடே அந்த இடத்துக்கு வந்தார். அதைத் தொடர்ந்து மாவோவின் படைகளும் சூடேயின் படைகளும் இணைந்தன. மாவோவும் சூடேயும் சேர்ந்து ஹுனான்—ஜியாங்சி —குவாங்டாங் ஆகிய பொதுவான எல்லைகளை கொண்டிருந்த மாவட்டங்களில் கம்யூனிஸ்ட் அதிகாரத்தை படிப்படியாக நிலைநிறுத்தி உறுதி செய்யும் பொருட்டு முதலில் ஆறு இடங்களில் சோவியத்துகளை உருவாக்க ஒரு திட்டம் தீட்டினார்கள். இதைத் தளமாகக் கொண்டு இதர பகுதிகளுக்கு விஸ்தரிப்பது என்றும் அவர்கள் முடிவு செய்தார்கள். இந்தத் திட்டமானது கட்சி அளித்த யோசனைகளுக்கு எதிரானதாகும்; மாவோவும், சூடேயும் இரண்டு பிரதானக் கடமை களை முதன்மைப் படுத்தினர்: ஒவ்வொரு பகுதியாக பிரித்துப் பார்ப்பது, அதில் சோவியத்துகளை உருவாக்குவது என்று வரையறுத்தனர். இவ்விரு போக்குகளையும் துரிதப்படுத்த மக்களுக்கு ஆயுதம் வழங்கப்பட வேண்டும் என்று அவர்கள் விரும்பினர். சுதந்திர வர்த்தகம், சிறைப்பிடிக்கப்பட்ட எதிரிப்படை

களை கண்ணியமாக நடத்துவது, ஜனநாயக வழிமுறைப் படி செயல்படுதல் போன்ற அம்சங்களை இவ்விருவரும் விரும்பினர்.

1928ம் ஆண்டு மே மாதத்தில் பிரதிநிதிகள் கூட்டம் ஒன்று அங்கே நடைபெற்றது. அதில் பலத்த விவாதத்துக்குப் பின் சீனாவில் சோவியத்துக்கள் உருவாக்கும் இயக்கம் வெற்றிபெறும் என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. ஆனால் கட்சியின் மத்தியக்குழு அதற்கு தன்னுடைய அனுமதியை கொடுக்க வில்லை.

அவ்வாண்டு குளிர் காலத்தின்போது கம்யூனிஸ்ட் அகிலத்தின் ஆறாவது காங்கிரஸ் மாஸ்கோவில் நடை பெற்றது. அது உருவாக்கிய புதிய வழியானது மாவோ வுக்கும், சூடேக்கும் முற்றிலும் ஏற்புடையதாக இருந்தது. 6-வது காங்கிரஸ் தீர்மானமானது 1925-27 சீனப்புரட்சி மற்றும் நான்சிங், குவாங் சூ மற்றும் இலை யுதிர்கால அறுவடை பேரெழுச்சித் திட்டம் ஆகிய வற்றின் அனுபவத்தை சுருக்கித் தந்ததுடன் விவசாய இயக்கத்தை வலியுறுத்தி அதற்கு அங்கீகாரமும் அளித்தது.

அதற்குப் பின்னர் சீனக் கட்சித் தலைவர்களிடையே இருந்த கருத்து வித்தியாசங்கள் மறைந்தன. கட்சி ஒற்றுமை மீண்டும் உருவாக்கப்பட்டது.

இதே சமயத்தில் சீனா முழுவதும் ஆங்காங்கு செஞ்சேனைகள் தோன்ற ஆரம்பித்தன. ஆங்காங்கு பேரெழுச்சிகள் தோன்றின. புதிய சோவியத் மாவட்டங் கள் உருவாக்கப்பட்டன. செஞ்சேனையின் புதிய படைப் பிரிவுகள் உருவாக்கப்பட்டன. ஜிங்காங்சனில் சூடேயே தளபதியாகக்கொண்ட நாலாவது செஞ் சேனை உருவாக்கப்பட்டது; மாவோ அதன் அரசியல்

வழிகாட்டியாக ஆக்கப்பட்டார். இந்தப் படைகளில் சேர ஏராளமான துருப்புகள் ஜிங்காங்சனுக்கு வந்தனர். அவர்களுக்கு குளிர்கால உடுப்புகள் இல்லாததோடு உணவும் தட்டுப்பாடாக இருந்தது. எனினும் அவர்கள் உற்சாகமாக இருந்தனர்.

நாலாவது செஞ்சேனை ஜியாங்சியின் தெற்குப் பகுதி வழியாக தனது பயணத்தை தொடங்கிற்று, போகும் வழியில் ஆங்காங்கே ஸ்தல செஞ்சேனைத் துருப்புகள் இவர்களுடன் சேர்ந்து கொண்டனர். செஞ்சேனை செல்வதற்கு முன்பே, எந்தெந்த இடங்களில் தீவிரமான வெகுஜன இயக்கங்கள் நடைபெற்றனவோ, அந்த இடங்களில் செஞ்சேனையின் வெற்றி சுலபமானது. செஞ்சேனையின் செல்வாக்கு எங்கும் பரவ ஆரம்பித்தது. செஞ்சேனையில் பொருளாதார ரீதியாக வும், அரசியல் ரீதியாகவும் நிலைமைகள் அபிவிருத்தி அடைந்தன என்ற போதிலும் அதற்குள் இருந்த குறை பாடுகளையும் களைய வேண்டியிருந்தது. 1929-ம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் நடைபெற்ற நாலாவது செஞ்சேனையின் ஒன்பதாவது கட்சி மாநாட்டிற்குப் பிறகு பல பலவீனங்கள் களையப்பட்டன. பலப்படுத்து வதற்கான கருத்துக்கள் விவாதிக்கப்பட்டன. பல தவறான கருத்துக்கள் அகற்றப்பட்டன. புதிய திட்டங்கள் தீட்டப்பட்டன. இவை அனைத்தும் சேர்ந்து செஞ்சேனையின் ஓர் உயர்தரத்திலான தத்துவார்த்த தலைமை தோன்றுவதற்கான அடித்தளத்தை அமைத்துக்கொடுத்தன. இந்த மாநாடானது ஜியாங்சியில் சோவியத் அதிகாரத்தை நிறுவுவதற்கான பாதையை வகுத்துக் கொடுத்தது. அடுத்த வருடத்தில் செஞ்சேனை பல அற்புதமான வெற்றிகளைக் கண்டது. கிட்டத்தட்ட தெற்கு ஜியாங்சி முழுவதும் செஞ்சேனையின் பிடியில் வந்தது. மத்திய சோவியத் பிராந்தியங்களுக்கான அடித்தளம் உருவாக்கப்பட்டது.

1930-ம் ஆண்டு பிப்ரவரி 7-ம் தேதி சோவியத்துகளின் எதிர்காலத் திட்டம் குறித்து விவாதிக்க தெற்கு ஜியாங்சியில் ஒரு முக்கியத்துவம் வாய்ந்த கட்சி மாநாடு நடைபெற்றது. இதில் கட்சி, ராணுவம், மற்றும் அரசாங்கத்தின் ஸ்தலப் பிரதிநிகள் கலந்துகொண்டனர். நிலம் வழங்கும் பிரச்சனை குறித்து இங்கே விரிவாக விவாதிக்கப்பட்டது. நிலத்தை மறுவிநியோகம் செய்யக் கூடாது என்று எதிர்த்தவர்களின் சந்தர்ப்பவாதமும் தோற்கடிக்கப்பட்டது. நிலத்தை மறுவிநியோகம் செய்வது என்றும் சோவியத்துக்கள் உருவாக்கப்படுவதை துரிதப்படுத்த வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது. செஞ்சேனையாவது இந்த மாநாடு நடைபெறும் வரை ஸ்தல மற்றும் மாவட்ட அளவில் மட்டுமே சோவியத்துக்ளை உருவாக்கி வந்தது. ஆனால் இந்த மாநாட்டில் ஜியாங்சி மாநில சோவியத் அரசாங்கத்தை உருவாக்குவது என்று முடிவு செய்யப்பட்டது. இந்தப் புதிய திட்டத்திற்கு விவசாயிகள் தங்களுடைய உற்சாகமான ஆதரவை நல்கினர். அது, அடுத்து வந்த மாதங்களில் கோமிண்டாங் படைகளை தோற்கடிப்பதற்கு உதவியாக இருந்தது.

# செஞ்சேனையின் வளர்ச்சி

மாவோ, சூடே போன்ற தலைவர்களின் வழி காட்டுதலின் கீழ் செஞ்சேனை மகத்தான வளர்ச்சி பெறத் துவங்கியது. தனது வீரர்களுக்கு மூன்று ஒழுக்க விதிகளை அது விதித்திருந்தது: (1) உத்தரவுகளுக்கு உடனே கீழ்படிய வேண்டும். (2) ஏழை விவசாய மக்களிடமிருந்து எதையும் பறிமுதல் செய்யக்கூடாது. (3) நிலப் பிரபுக்களிடமிருந்து கைப்பற்றப்பட்ட அனைத்துப் பொருட்களும் விநியோகிக்கப்படும் பொருட்டு உடனடியாக அரசாங்கத்திடம் ஒப்படைக்கப் பட வேண்டும்.

சிறிது காலத்திற்குப்பின் விவசாய மக்களின் ஆதரவைப் பெறும் பொருட்டு மேலும் எட்டு விதிகள் உருவாக்கப்பட்டன.

1) ஒரு வீட்டை விட்டு வெளியேறும்போது தூங்குவதற் காகப் பயன்படுத்தப்பட்ட கதவுகளை அப்படியே மாட்டி வைக்கவேண்டும்.

2) சிப்பாய்கள் படுத்து உறங்கும் வைக்கோல் பாயை சுருட்டி திருப்பித் தரவேண்டும்.

3) மக்களிடம் மரியாதையாகவும் பண்புடன் நடந்து கொள்வதோடு உங்களால் முடிந்தளவு உதவியும் செய்யவேண்டும்.

4) கடன் வாங்கிய பொருட்களைத் திருப்பித் தந்துவிட வேண்டும்.

5) உடைந்து போன பொருட்களுக்குப் பதிலாக புதுப் பொருட்களாக தரவேண்டும்.

6) விவசாயிகளுடன் நடக்கும் பேரங்களில் நேர்மையாக நடக்க வேண்டும்.

7) வாங்கும் பொருட்களுக்குப் பணம் கொடுத்துவிட வேண்டும்

8) சுகாதாரமாக இருக்கவேண்டும்; அதிலும் குறிப்பாக மக்களுடைய வீடுகளிலிருந்து சிறிது தூரத்தில்தான் கழிவறைகள் ஏற்படுத்தப்பட வேண்டும்.

முதலாவது உத்தரவுக்கு ஒரு காரணம் இருந்தது. சீனர்களுடைய வீடுகளில் மரக்கதவுகள் சுலபமாக எடுக்கப்பட முடியும் என்பதோடு இரவில் படுத்துக் கொள்வதற்கான படுக்கையாகவும் அவை பயன்படுத்தப் பட்டு வந்தன. அவ்வாறு பயன்படுத்தும் செஞ்சேனை வீரர்கள் அடுத்தநாள் காலையில் அதை மீண்டும் மாட்டி வைக்க வேண்டும் என்பதையே அந்த உத்தரவு குறிக்கிறது.

இவை போக செஞ்சேனை வீரர்களுக்கு மூன்று முக்கிய கடமைகள் போதிக்கப்பட்டன: 1. எதிரியை எதிர்த்து மரணமடையும் வரை போராடு 2. மக்களை ஆயுதபாணியாக்கு 3. போராட்டத்தை ஆதரிப்பதற் காகப் பணம் திரட்டு.

சீன செஞ்சேனையை உருவாக்குவதற்கான அடிப் படைக் கோட்பாடுகள், அந்த செஞ்சேனையின் நீண்ட கால நடைமுறைக்கொள்கை மற்றும் உடனடி நடை முறைக் கொள்கையை மாவோ உருவாக்கினார்.

செஞ்சேனை என்பது தொழிலாளி வர்க்க தத்துவத் தினால் வழிகாட்டப்பட வேண்டும். மக்களின் போராட்

டத்திற்கு பயன்பட வேண்டும்; தளங்களை நிர்மாணிப் பதில் உதவி செய்ய வேண்டும் என்று மாவோ வரையறுத் தார். செஞ்சேனையின் மீது கட்சியின் தலைமை ஸ்தாபன ரீதியாகவும், அரசியல் ரீதியாகவும், சித்தாநத ரீதியாகவும் உறுதிப்படுத்தப்பட வேண்டும் என்று மாவோ கோடிட்டுக காட்டினார்.

விவசாயிகளை முதுகெலும்பாகக் கொண்ட செஞ்சேனை கிராமப்புற மாவட்டங்களில் தளங்கலைள நிறுவ வேண்டும். எதிரிகளை எதிர்த்து ஆயுதந் தாங்கிப் போராட வேண்டும். அதேசமயம் மககளிடம் கிளர்ச்சிப் பிரச்சாரம் செய்து அவர்களை அமைப்பு ரீதியில் ஒன்று சேர்க்க வேண்டும்; ஆயுதபாணியாக்க வேணடும். புரட்சி கரமான அரசாங்கத்தை நிறுவுவதற்கும், கமயூனிஸ்ட் கட்சியைக் கட்டுவதறகும் உதவி செய்யவேண்டும். போராட்டத்திற்கு நிதியையும் சேர்க்கவேண்டும் என்று மாவோ தெளிவுபடுத்தினார்.

இந்த அடிப்படையில் உருவான சீன செஞ்சேனை ஒரு புரட்சிகர ராணுவமாக உருவெடுத்தது.

மாவோ இத்தகைய புரட்சிகரராணுவக்கொள்கையை உருவாக்கியதோடு சீன நிலைமை களுககேற்றார் போல் கெரில்லாப் போர் முறையையும உருவாக்கினார். ஆரம்ப நிலையிலிருந்து படிப்படியாக விரிவுபடுத்தப் பட்ட செஞ்சேனையானது, பலம் பொருந்திய எதிரியை வீழ்த்துவதற்கு இந்த கெரில்லா போர் முறை பெரிதும் பயன்பட்டது. மாவோ கூறினார் :

''எதிரியை ஆழமாக ஊடுருவச் செய்வதற்கு ஆசை காட்டுதல்''

''எதிரி முன்னேறுகிறபொழுது நாம் பின்வாங்கு கிறோம்;

''எதிரி நிற்கிறபொழுது நாம் துன்புறுத்துகிறோம்.''

''எதிரி களைப்படையும்பொழுது நாம் தாக்கு கிறோம்''

''எதிரி பின்வாங்கும்பொழுது நாம் துரத்து கிறோம்'' என்று கெரில்லாப் போர் முறையை மாவோ விவரித்தார்.

1930-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் செஞ்சேனையின் மூன்றாவது படையும் ஒன்றாவது படையும் சந்தித்து முதல் முன்னணி ராணுவமாக உருவாக்கப் பட்டு மாவோ, சூடே தலைமையின்கீழ் சங்ஷா நகரின் வெளிப்புறத்தை அடைந்தது. இந்த நேரத்தில் சீன தொழிலாளிகள் மற்றும் விவசாயிகளின் புரட்சிகரக் குழு உருவாக்கப்பட்டு, மாவோ, அதன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். மாவோ பிறந்த மாநிலமான ஹுனானில் செஞ்சேனையின் செல்வாக்கு பரவ ஆரம்பித்தது. ஹுனான் விவசாய மக்கள் மத்தியில் மாவோவின் பெயர் மிகவும் பிரபலமடைந்து வந்தது. மாவோ, சூடே ஆகியோரைப் போன்ற கம்யூனிஸ்ட்டு களை உயிருடன் பிடித்துக் கொடுத்தாலோ அல்லது அவர்களது உடலைக் கொண்டுவந்தாலோ பெரும் வெகுமதி அளிக்கப்படும் என கோமிண்டாங் அரசாங்கம் அறிவிப்பு செய்தது. ஆனால் அரசின் அறிவிப்பு மக்களிடம் எடுபடவில்லை. ஆத்திரமடைந்த கோமிண்டாங் நிர்வாகம் மாவோவின் கிராமத்தில் இருந்த மாவோவின் இளம் மனைவி யாங் கை குய்யையும் அவருடைய மூத்த மகன் அனியிங்கையும் மாவோவின் ஒன்றுவிட்ட சகோதரியையும், மாவோவின் இரு சகோதரர்களின் மனைவிகளையும் கைது செய்தது. மாவோவின் இரு சகோதரர்களான மாவோ ஜெமினும் மாவோ ஜேடனும் புரட்சிப் படையில் இருந்தனர்.

ரத்தவெறி பிடித்த கோமிண்டாங் காதகர்கள் மாவோவின் மனைவியையும், அவருடைய சகோதரியையும் 1930-ம் ஆண்டு இலையுதிர் காலத்தில் சுட்டுக் கொன்றனர். மாவோவின் மகன் அனியிங்கிடம் அவர் தந்தை குறித்து தொடர்ந்து விசாரித்தனர். அந்தச் சிறுவனிடமிருந்து எந்தப் பதிலும் கிடைக்காமல் போகவே அவர்கள் வேறு ஒரு உபாயத்தைக் கையாண்டனர். சிறிய மீனைவிட்டு பெரிய மீனைப் பிடிக்கவேண்டும் என்பதுபோல அந்த வெறியர்கள் சிறுவன் அனியிங்கை விடுதலைசெய்து அவன்மூலம் மாவோவைப் பிடிக்க முயன்றனர். அவர்கள் மாவோவின் வீட்டை இரவும் பகலும் வட்டமிட்டுக் கொண்டேயிருந்தனர். அனியிங்கிற்கு அன்குயிங், அன்லாங் என்று இரண்டு சின்னஞ்சிறு தம்பிகள் இருந்தனர்.

சங்ஷா நகரைப் பிடிக்க செஞ்சேனை இரண்டாவது தடவையாக முயற்சி செய்தபோது தோல்விகண்டது. எனவே சில வாரங்களுக்குப் பிறகு ஜியாங்சி நகருக்கு பின் வாங்க நேர்ந்தது. அதே சமயத்தில் ஹுனனில் கோமிண்டாங் படைகள் ஏராளமாக குவிககப்பட்டு வந்தன.

1930-ம் ஆண்டின் இறுதியில் செஞ்சேனையை ஒழித்துக்கட்டுவதற்காக சியாங் கே சேக் ஒரு லட்சம் துருப்புகளை ஏவினான். அவைகள் ஐந்து வழிகள் மூலமாக கம்யூனிஸ்ட் பகுதிகளைச் சுற்றி வளைத்தன. ஆனால் 40 ஆயிரம் பேரை மட்டுமே கொண்ட செஞ்சேனை தனது திறமை மிக்க சாகசத்தால் கோமிண்டாங் படையைத் தோல்வியடையச் செய்து பெரும் வெற்றி கண்டது.

இந்த யுத்தம் முடிந்த நான்கு மாத காலத்திற்குப்பின் சியாங் கே சேக் 2 லட்சம் துருப்புகளைக் கொண்ட ராணுவத்தை செஞ்சேனை மீது ஏவினான். அந்தப்

படைகள் ஏழு வழிகளில் கம்யூனிஸ்ட்டுகளை சுற்றி வளைத்தன. சோவியத் அதிகாரம் ஒரு குறுகிய பரப்பளவிலே இருந்த போதிலும் நிதி ஆதாரங்களும், ராணுவத் தளவாடங்களும் குறைவாகவே இருந்த போதிலும் செஞ்சேனை தனது வழக்கமான யுக்தியைக் கையாண்டது. ஒருமாத காலத்திற்குள்ளேயே வீரமிக்க செஞ்சேனை சியாங் கே சேக்கின் படைகளை விரட்டி விரட்டி அடித்தது.

இதைக்கண்டு ஆத்திரமடைந்து அறிவிழந்து போன சியாங் கே சேக் ''சிவப்பு கொள்ளையர்களை நானே கொன்று தீர்க்கிறேன்'' என்று கூச்சலிட்டபடி 3 லட்சம் துருப்புகளைக் கொண்ட படையை அழைத்துக்கொண்டு செஞ்சேனையை சுற்றி வளைத்தான். மிகப் பிரபலமான அவனது மூன்று தளபதிகளும் ஆளுக்கொரு வழியில் செஞ்சேனைத் துருப்புக்களை சுற்றி வளைக்க முயன்றனர். நாளொன்றுக்கு 80 கிலோ மீட்டர் வீதம் சீன — சோவியத் மையப் பகுதிக்கு சியாங் கே சேக்சின் படைகள் முன்னேறின. இதைப் பயன்படுத்திக்கொண்டு செஞ்சேனை முப்பதாயிரம் பேர் கொண்ட தன்னுடைய படையை ஐந்து வழிகளில் ஏவிவிட்டது. முதல் மோதலிலேயே செஞ்சேனை ஏராளமான எதிர் துருப்புகளையும் ஆயுதங்களையும் கைப்பற்றியது. எதிரியின் படைகள் ஒவ்வொன்றாக நிர்மூலமானது. படுதோல்வி கண்ட சியாங் கே சேக் தன்னுடைய துருப்புகளை இழுத்துக் கொண்டு ஓட்டம் பிடித்தான்.

இதைத்தொடர்ந்து சிறிது காலத்திற்கு செஞ்சேனை அமைதியான சூழலில் முன்னேறியது. அதன் வளர்ச்சி பெருகியது; அதன் விரிவாக்கமும் அதிகரித்தது. 1928–31 காலகட்டத்தில் கம்யூனிஸ்ட் கட்சியின் பிடியில் இருந்த பகுதிகளில் நிலச்சீர்திருத்தம் செய்யப்பட்டது. மக்கள் தொகைக்கு ஏற்ப நிலம் சமமாக வினியோகிக்கப்பட்டது நிலப்பிரபுக்களுக்குச் சொந்தமாக இருந்த நிலமும்,

பொது நிலமும் பறிமுதல் செய்யப்பட்டது. நகரங்களி லுள்ள சிறு வியாபாரிகள் இந்த அரசாங்கத்திற்கு கீழ்ப் படிந்து நடக்கும் வரையில் விட்டுவைக்கப்பட்டார்கள். மீதமிஞ்சிய கட்டணங்கள், வரிகள் அனைத்தும் ரத்து செய்யப்பட்டன.

புரட்சிக்கு முன்பிருந்த அனைத்து கடன்களும் ரத்து செய்யப்பட்டன. மக்கள் பொருளாதார ரீதியில் பயனடைந்ததோடு அரசியல் ரீதியிலும் ஆதாயமடைந் தார்கள்.

இந்தப் புரட்சியின் தளங்களைச் சுற்றி எதிரியின் படை குவிக்கப்பட்டிருந்ததால், இதன் ஒவ்வொரு தளமும் (நகரியமும்) ராணுவ வழியில் அமைக்கப்பட்டது 8 வயது முதல் 50 வயதுக்குட்பட்டவர் ஒவ்வொருவரும் அவரவர் வயதிற்கேற்ப குழந்தைகள் படைப்பிரிவிலும், இளந்தொண்டர்கள் பிரிவிலும், செங்காவலர் பிரிவிலும் சேர்க்கப்பட்டனர். அவர்களுக்கு ராணுவப்பயிற்சியும், அரசியல் பயிற்சியும் அளிக்கப்பட்டன.

இத்தகைய வெகு ஜன ராணுவ அமைப்புகள் செஞ்சேனையின் பிரதான ஆதார பலமாக விளங்கின.

புரட்சிக்குப்பின் நிறுவப்பட்டத் தொழிலாளர்கள் — விவசாயிகள் ராணுவத்தினரின் அரசாங்கத்தில்(சோவியத் துகளின்) மிக அடிமட்ட அமைப்பான நகரிய மட்டத்தில் ஏழை விவசாயிகளும், விவசாயத் தொழிலாளிகளும் பிரதான ஊழியர்களாக இருந்தார்கள். புரட்சிகர மான ஏழை விவசாயிகளையும், விவசாயத் தொழிலாளி களையும் மையமாகக் கொண்ட உழைக்கும் மக்களின் ஓர் அரசாங்கமாக அது திகழ்ந்தது.

# அரசுத் தலைவராக மாவோ

1931ம் ஆண்டு நவம்பர் 7ந்தேதி சீனாவில் முதல் சோவியத் மாநாடு (காங்கிரஸ்) நடைபெற்றது. அது, மாவோவை தலைவராகவும், சூடேயை செஞ்சேனையின் பிரதம தளபதியாகவும் கொண்ட சீனாவின் மத்திய சோவியத் அரசாங்கத்தை உருவாக்கியது.

1931ம் ஆண்டு சீன புத்தாண்டு தினத்திற்குப் பிறகு மாவோவின் மூன்று மகன்களும், ஷாங்காய் நகருக்கு ரகசியமாக அழைத்துச் செல்லப்பட்டனர். கட்சி செய்திருந்த ஏற்பாட்டின்படி மாவோவின் மைத்துனர் மனைவி இந்தச் சிறுவர்களை அழைத்துச் சென்று ஷாங்காய் நகரிலிருந்த மாவோவின் சகோதரர் மாவோ ஜெமினிடம் ஒப்படைத்தார்.

புரட்சி இயக்கத்தில் ஈடுபட்டிருந்தவர்களுடைய குழந்தைகளுக்காகவும், அதில் உயிரிழந்தவர்களுடைய குழந்தைகளுக்காகவும், தலைமறைவாகச் செயல்பட்டு வந்த கட்சி அமைப்பு அந்நகரில் ஒரு மழலையார் பள்ளியை நடத்தி வந்தது. மாவோவின் மூன்று மகன்களும் அதில் சேர்க்கப்பட்டனர்.

ஆனால் அவ்வாண்டு கோடை காலத்தில், எதிரியின் தாக்குதல் காரணமாக தலைமறைவு கட்சி அமைப்பு சிதறிப்போனது. அதன் ஊழியர்கள் கைது செய்யப்பட்டனர். எனவே அந்தப் பள்ளியின் மாணவர்கள் சரியான உணவு கிடைக்காமல் பட்டினி கிடக்க வேண்டி வந்தது. பல குழந்தைகள் நோய்வாய்ப்பட்டனர். மாவோவின் கடைசி மகன் அன்லாங் நோய் முற்றி

இறந்துபோனார். மாவோவின் மற்ற இரு மகன்களும் உணவுக்காக இங்கும் அங்கும் அலைந்து கொண்டிருந்தனர்.

1936ம் ஆண்டில் கட்சி ஊழியர்கள் மாவோவின் இரு மகன்களையும் கண்டுபிடித்து சோவியத் யூனியன் நாட்டிற்கு அனுப்பிவைத்தனர். சோவியத் யூனியன் அரசாங்கம், பல நாடுகளின் தொழிலாளி வர்க்க இயக்கத்தில் ஈடுபட்டிருந்த, புரட்சி இயக்கத்தில் ஈடுபட்டிருந்தவர்களின் குழந்தைகளுக்காக ஒரு சர்வதேச குழந்தைகள் பள்ளியை நடத்தி வந்தது. மாவோவின் இருமகன்களும் அங்கேயே தங்கி படித்து வளர்ந்தார்கள்.

பல வருடங்களுக்குப் பிறகு மாவோவின் மூத்த மகன் அனியிங் சோவியத் செஞ்சேனையில் சேர்ந்து பயிற்சி பெற்று 'லெப்டினென்' ஆனார்.

1931ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் கோமிண்டாங் ராணுவத்தின் 28வது பிரிவு படைப்பகுதி தன் தலைமைக்கு எதிராக கிளர்ச்சி செய்து செஞ்சேனை யுடன் சேர்ந்து கொண்டது. இவ்வாறு சேர்ந்த 10 ஆயிரத்திற்கும் மேற்பட்ட கோமிண்டாங் ராணுவ வீரர் களைக்கொண்ட செஞ்சேனையின் 5வது ராணுவப் பிரிவு உண்டாக்கப்பட்டது.

செஞ்சேனை தனது தாக்குதல்களை இப்பொழுது தொடங்கியது. ஸாங்ஸு என்ற நகரில் செஞ்சேனைக்கும், கோமிண்டாங் படைகளுக்குமிடையே பெரும் யுத்தம் நடைபெற்றது. இறுதியில் செஞ்சேனை மகத்தான வெற்றிபெற்று அந்த நகரைப் பிடித்தது.

அதே போல் லீன் லிசுவான், ஜியான்னிங், டாய்னிங் போன்ற இடங்களிலிருந்த கோமிண்டாங் படைகள்மீது செஞ்சேனை தனது பலத்த தாக்குதலைத் தொடுத்தது,

1932ம் ஆண்டு அக்டோபர் மாதத்திலிருந்து 1934 ம் ஆண்டு நெடும் பயணம் துவக்கப்படும் காலம் வரை மாவோ முழுக்க முழுக்க சீனாவின் சோவியத் அரசாங்கத்தின் வேலைகளையே கவனித்து வந்தார். செஞ்சேனையின் ராணுவத் தலைமையை சூடேயிடமும் இதர தளபதிகளிடமும் விட்டுவிட்டார்.

1933ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் கோமிண்டாங் படைகள் நான்காவது தாக்குதலைத் தொடுத்தன.

நான்சிங் என்ற இடத்தில் நடைபெற்ற இந்த மோதலில் கோமிண்டாங்கின் இரண்டு படைப் பிரிவுகள் நிராயுதபாணியாக்கப் பட்டன என்பதுடன் அதன் இரு தளபதிகளும் பிடிக்கப்பட்டனர். அதனுடைய 5வது பிரிவின் ஒரு பகுதி அழிக்கப்பட்டது. 52வது பகுதி முற்றிலுமாக நிர்மூலமாக்கப்பட்டது. டாங் பி மற்றும் ஹீவாங்பி என்ற இடங்களில் நடைபெற்ற யுத்தத்தில் மட்டும் 13ஆயிரம் கோமிண்டாங் துருப்புகள் பிடிக்கப் பட்டனர். தன்னுடைய கோமிண்டாங் ராணுவத்திலேயே மிகச் சிறந்ததென்று சியாங் கே சேக் கருதி வந்த 11வது பிரிவு நிர்மூலமாக்கப்பட்டது. அதனுடைய தளபதி படுகாயமடைந்தான்.

இந்த யுத்தங்கள் செஞ்சேனைக்கு முக்கியமான திருப்பு முனையாக அமைந்ததோடு சியாங் கே சேக்கின் நாலாவது படையெடுப்பையும் முறியடித்தது. இந்தத் தோல்வி தன் வாழ்வில் ஏற்பட்டமிகப்பெரும் அவமானம் என்று சியாங் கே சேக், தன்னுடைய யுத்த முனைத் தளபதியான சென் செங், என்பவனுக்கு கடிதம் அனுப்பினான். சென் செங், இந்த நாலாவது யுத்தம் நடத்தப்பட்டதை விரும்பவில்லை. கம்யூனிஸ்ட்டுகளை எதிர்த்துப் போராடுவது என்பது ''வாழ்நாள் முழுவதும் செய்யவேண்டிய வேலை,'' ''ஆயுள் தண்டனை,' போன்றது என்று சென் செங் கூறியிருக்கிறான். இதைக்

கேள்விப்பட்ட சியாங் கே சேக், சென் செங்கை ராணுவத் தலைமைப் பொறுப்பில் இருந்து நீக்கி விட்டான்.

சியாங் கே சேக் கடைசி போராட்டத்துக்கு தயாரானான். 10 லட்சம் பேரை ராணுவத்தில் சேர்த்தான். அவனுடைய ஜெர்மன் ஆலோசகர்களின் திட்டப்படி ராணுவ யுக்திகளை மாற்றிக் கொண்டான் செஞ்சேனை மீது போரைத் துவக்கினான்.

இந்தப் போரில் செஞ்சேனை சில பின்னடைவுகளை எதிர் நோக்க வேண்டியிருந்தது. அது எப்பொழுதுமே ஒரே இடத்தில் இருந்து யுத்தம் நடத்துகிற ராணுவம் அல்ல. எதிரியைத் தாக்குவது, உடனேயே பிரிந்து சென்று விடுவது. மீண்டும் ஒன்று சேர்ந்து தாக்குவது, எதிரியைச் சோர்வடையச் செய்வது போன்ற யுக்தி வழிப்பட்ட சாகசங்களையே பின்பற்றி வந்தது. ஆனால் இம்முறை அது கடைப்பிடித்த ஒரேஇடத்தில் இருந்து கொண்டு தன்னை விட அதிக எண்ணிக்கை கொண்டிருந்த கோமிண்டாங் படைகளை எதிர்த்துப் போரிடுவது என்ற சாதாரணப் பாதுகாப்பு முறையானது ஒரு தவறான யுக்தியாக முடிந்தது.

எனவே இத்தகைய தவறுகளின் காரணமாகவும், கோமிண்டாங் படைகள் பின்பற்றிய தந்திரம் மற்றும் யுக்தி வழிகள் காரணமாகவும் செஞ்சேனை புதிய நிலைமைகளில், புதிய சூழ்நிலைமைகளில் செயல் பட்டாக வேண்டி இருந்தது. ஜியாங்சியின் நிலைமை செஞ்சேனைக்கு சாதகமற்றதாக மாறிக் கொண்டு வந்தது. இரண்டாவதாக, நாட்டின் அரசியல் நிலைமை யானது சீனாவின் வடமேற்குப் பகுதியை பிராதன மோதலுக்கான களமாக மாற்ற வேண்டுமென்ற முடிவை துரிதமாக எடுக்கச் செய்தது.

1934-ம் ஆண்டு ஜியாங்சி மாநிலம் முழுவதையும் சுற்றி வளைக்கச் சொல்லி தன் படைகளுக்கு சியாங்-கே-சேக் உத்தரவிட்டான். செஞ்சேனையினருக்கு உணவு, ஆயுதங்கள் மற்றும் உதவி கிடைக்காதபடி செய்து அவர்களைப் பட்டினியில்ஆழ்த்தி சரணடையச் செய்வது அல்லது ஒழித்துக்கட்டுவது என்ற முடிவுக்கு அவன் வந்தான். இந்த நிலையில் அவ்வாண்டு ஜனவரி மாதத்தில் அகில சீன சோவியத்துக்களின் இரண்டாவது மாநாடு ரூய்ஜிங் என்ற இடத்தில் நடைபெற்றது. இம்மாநாட்டில் மாவோ ஒரு நீண்ட விளக்கவுரை நிகழ்த்தினார். புரட்சியின் சாதனைகளைக் குறித்த ஒரு ஆய்வும் செய்யப்பட்டது. இம்மாநாடு மீண்டும் மாவோவைத் தலைவராக தேர்ந்தெடுத்தது. சீனத்தின் வடமேற்குப் பகுதியை தளமாகக்கொண்டு செயல்படுவது என்ற மாவோவின் ஆலோசனையை மாநாடு ஏற்றுக்கொண்டதோடு அந்தப் பகுதிக்குப் போய்ச் சேர்வதற்கான ஒரு நெடும் பயணத்தையும் மேற்கொள்ளுவதென்று மாநாடு முடிவு செய்தது. இவ்வாறு, வரலாற்றுப் பிரசித்தி பெற்ற சீன செஞ்சேனையின் நெடும் பயணம் மாவோ, சூடேயின் தலைமையில் துவங்கியது.

# நெடும் பயணம்
# அனுபவ பொக்கிஷம்

நான்கு வருடகாலமாக கட்டுக் கோப்பாக அமைந்து வந்த புரட்சி அரசாங்கம், தனது ஆயுதங்களோடும், படைகளோடும், மக்களோடும் நெடும் பயணத்தில் இறங்கியது.

மகத்தான நெடும்பயணம் சியாங் கே சேக்கின் முற்றுகையை உடைத்துக்கொண்டு 1934-ம் ஆண்டு நவம்பர் மாதம் ஜியாங்சியிலிருந்து நடைப்பயணமாக கிளம்பியது. சியாங் கே சேக்கின் படைகள் துரத்திக் கொண்டே வரத் துவங்கின. காடுகளையும் மேடுகளையும் செஞ்சேனை கடக்க வேண்டியிருந்தது. மிகவும் ஆழமானதும் ஆபத்தானதுமான எண்ணற்ற ஆறுகளைக் கடக்க வேண்டியிருந்தது. கடும் வெயிலையும், சூறாவளிக் காற்றையும் கடுங்குளிரையும், புயல் காற்றையும் அது தாங்கி முன்னேற வேண்டிருந்தது. பயங்கரமான பூர்வ குடிமக்கள் வாழும் பகுதிகளையும், சமதளப் பகுதிகளையும் அது கடந்து செல்ல வேண்டியிருந்தது. சியாங் கே சேக் விமானங்களின் கொடூரமான குண்டு வீச்சிலிருந்து தப்புவதற்காக மலைக் குகைகளிலும் வனப் பகுதிகளிலும் பதுங்க வேண்டியிருந்தது. அது போகும் வழியில் இருந்த குவாங்டாங், ஹூனான், குவாங்சி, யுன்னான், சிசுவான் மற்றும் சான்சி போன்ற மாநிலங்களின் ஸ்தலத் துருப்புகளோடு மோதி அவைகளை வெற்றிகண்டு முனனேற வேண்டியிருந்தது.

இந்த செஞ்சேனையினர் நீஹ் ஏர் என்ற சீன நவயுகக் கவிஞன் பாடிய

''எழுக! அடிமையாயிருக்க
விரும்பாதவர் அனைவரும் எழுக!

''நமது சதையும் ரத்தமும் சேர்ந்து
ஒரு பெருஞ் (சீன) சுவர் எழுப்பும்''

என்ற புரட்சி கீதத்தைப் பாடிக்கொண்டே முன்னேறிச் சென்றனர்.

செஞ்சேனை கிராமங்கள் வழியாகச் செல்லும் போது நிலப்பிரபுக்களின் அடிமைகளாக இருந்தவர்கள் அனைவரும் விடுவிக்கப்பட்டனர். பலர் தப்பி ஓடி வந்து செஞ்சேனையில் சேர்ந்து கொண்டனர். அவ்வாறு தப்பி ஓடிவந்த ஒரு பதினான்கு வயதுப் பெண் செஞ்சேனை யில் சேர்ந்து ஆயுதம் ஏந்தி போராடியதுடன் எழுதப் படிக்கவும் கற்றுக்கொண்டார். சிறிது காலத்திற்குப் பின் செஞ்சேனையின் பிரதம தளபதியான சூடேவை மணந்துகொண்டார். சுய கல்வி மூலம் அறிவைப் பெருக்கிக்கொண்ட அந்தப் பெண் 1939-ம் வருடம் யேனான் ராணுவ சர்வ கலாசாறையில் அரசியல் விஞ்ஞானத்தில் பட்டம் பெற்றார். செஞ்சேனை எத்தகைய அற்புமான சாதனைகளைப் புரிந்தது என்பதற்கு இது ஒரு உதாரணம்.

இந்த நெடும்பயணத்தின் பிரபலத் தலைவர்களுள் ஒருவரான சூ என் லாய்யின் துணைவியார் தங்களுடைய அனுபவத்தை விவரிக்கிறார்.

''நாங்கள் ஓர் ஊரில் தங்கி எங்கள் மூட்டை முடிச்சு களை அவிழ்த்தவுடன், அவ்வூர்ப் பெண்களை ஒன்று சேர்த்து ஒரு கூட்டம் போட்டு. ஜப்பானியர்கள் நாட்டின் மீது படையெடுத்து வருகிறார்களென்றும் *

---

* சீன நாட்டின் மீதான ஜப்பானிய ஆக்கிரமிப்பு பற்றி தனி அத்தியாயத்தில் பார்க்க

அவர்களை எதிர்த்து போராட, செஞ்சேனையானது வடமேற்கு நோக்கி செல்லுகிறதென்றும் எல்லோருக்கும் எடுத்துச் சொல்லுவோம். அங்கு பிறரைச் சுரண்டி வாழும் ''பெரிய மனிதர்''களை கைது செய்வித்து, அவர்களுடைய குற்றங்கள் விசாரிக்கச் செய்வோம். எங்கள் படையிலே காயமடைந்தவர்களுக்கு சிகிச்சை செய்வதுதான் எங்களுக்கு மிகவும் கடினமாயிருந்தது. காயமடைந்தவர்களை தூக்கிக்கொண்டு வருவோர், மற்ற படையினருடன் தொடர்ந்து வர முடிவதில்லை. ஜியாங்ஸியை விட்டு நாங்கள் புறப்பட்ட போது தூக்கிவரும் படையுடனேயே புறப்பட்டோம். ஆனால் க்வைசௌ பிரதேசம் வந்ததும், கூலியாட்களை அமர்த்திக் கொள்ள வேண்டியதாயிருந்தது, அவர்களோ இடையிலே சொல்லிக் கொள்ளாமல் ஓடிவிட்டனர். எனவே, படையைச் சேர்ந்த பெண்களே, காயமடைந்தவர்களைத் தூக்கிச் செல்ல வேண்டியதாயிற்று. இது மிகவும் கஷ்டமாகவே இருந்தது. தவிர எங்கள் படையில் பத்து வயதுக்குட்பட்ட சுமார் நூறு குழந்தைகள் இருந்தன. இக்குழந்தைகளும் நடந்தே வந்தன; ஆம். தங்களுடைய சாமான்களை தாங்களே தூக்கிக் கொண்டு! மற்றும் வழி நெடுக நாங்கள் நடத்திக் கொண்டு வந்த நாடகங்கள், கோஷ்டி கானங்கள் முதலியவற்றில் இந்தக் குழந்தைகளும் கலந்து கொண்டன.''

செஞ்சேனையினர் கட்டுப்பாட்டுடன் முன்னேறினர். அவர்கள் போகும் வழியிலுள்ள கிராமங்களில் ஏழை எளிய மக்களுக்கு உதவி செய்தனர். அவர்களிடமிருந்து ஒரு துரும்பைக்கூட எடுக்கமாட்டார்கள். தங்களுடைய லட்சியங்களை மக்களுக்கு எடுத்துக் கூறினார்கள். இவற்றின் விளைவாக செஞ்சேனை மக்களின் மகத்தான ஆதரவைப் பெற்றது. அதனுடைய பலம் அதிகரிப்பதற்கு இதுவே காரணமாக அமைந்தது. நெடும் பயணத்தின் முன்னணியில் பாதையைச் செப்பனிடக் கூடிய எதிரியின்

நடமாட்டத்தை அறியக்கூடிய குழுவினர் செல்வார்கள். அத்துடன் செஞ்சேனையின் ஒரு பகுதி செல்லும் அதைத் தொடர்ந்து மாவோ வருவார். அவருக்குப் பின் மருத்து வப் பகுதியினர் அவர்களுக்குப் பின் செஞ்சேனை என்ற படியாக இந்த நெடும் பயணம் அமைந்திருந்தது. தினமும் இரவில் மாவோ, தான் தங்குமிடத்தில் சீனாவின் வரை படத்தை விரித்து வைத்துக் கொள்வார். ஒரு சிறிய மண்ணெண்ணை விளக்கின் உதவியோடு தாங்கள் அன்று கடந்த இடம், அடுத்த நாள் கடக்க வேண்டிய இடம் அந்த இடத்திலுள்ள எதிரியின் துருப்புகள், கடக்க வேண்டிய ஆறுகள் மலைகள் அவற்றை எந்த முறையில் கடந்து செல்வது என்பதைக் குறித்து மாவோ ஆராய் வார். அது குறித்து முடிவு செய்து உடனுக்குடன் தனக்கு முன்பாக போய்க்கொண்டிருக்கும் படைக்கு வழிகாட்டும் உத்தரவுகள் கொடுப்பார். அவ்வப்போது தன்னை வந்து சந்திக்கும் செஞ்சேனைத் தலைவர்களுடன் இரவில் விவாதங்கள் நடத்துவார். முதலில் செல்லும் குழுவின ரிடமிருந்து தகவல் வந்ததும் பயணம் துவங்கப்பட்டு விடும். அவர் தங்குமிடம் என்பது ஒரு சிறிய கூடாரமாக இருக்கும். அவருடைய மேஜை என்பது பாறைக் கற்கள் மீது வைக்கப்பட்ட துண்டுப் பலகையேயாகும்.

அவருடைய அன்றாட உணவென்பது காய் கறிகளுடன் வேக வைத்த சோற்றுக் கட்டிதான். அவருடைய பானங்கள் என்பது கொதிக்க வைத்த வெந்நீர்தான். அவருடைய தேவையைக் கவனிப்பதற்கென்று தொண்டர்கள் இருந்தாலும் அவர்களுக்கு அதிக வேலை இராது. செஞ்சேனை வீரர்களிடம் பேசும் சமயங்களில் அவர்களுடைய குடும்பத்தைப் பற்றி பரிவுணர்வோடு மாவோ விசாரிப்பார். அவர்களுடைய சோர்வைப் போக்கி உற்சாகப்படுத்துவார். செஞ்சேனை முழுவதும் தாங்கள் ஒரு மாபெரும் தலைவனின் வழிகாட்டலின் கீழ் செயல்படுகிறோம் என்று பூரிப்படைந்து அனைத்து

சிரமங்களையும் தாங்கிக் கொண்டது. செஞ்சேனை வீரர்கள் மிகுந்த உற்சாகத்துடன் போரிட்டனர்,

மார்வோவின் உடமை என்று சொல்லப்படக் கூடியது எல்லாம் இரு ஜோடி ராணுவ உடுப்புகள் ஓவர் கோர்ட். சீனாவைக் குறித்த ஏராளமான வரைபடங்கள் இரண்டு கம்பளிகள், ஒரு போர்வை, ஒரு உல்லன் ஸ்வெட்டர், ஒரு உடைந்த குடை சாப்பிடுவதற்கான பாத்திரம் அவருடைய வரைபடங்களை வைப்பதற்கான ஒன்பது தட்டுகொண்ட ஒரு சிறிய ஷெல்ப், கட்சி ஆவணங்கள் மற்றும் புத்தகங்கள் ஆகியவைதான். அவர் தங்குமிடத்தில் இரண்டு சிறிய மரப்பலகைகள் ஒன்றாக வைக்கப்பட்டு கம்பளி விரித்து வைக்கப்படும். உறங்கும்பொழுது மாவோ ராணுவ் உடுப்பை சுருட்டி தலையணையாக வைத்துக் கொள்வார்.

1935-ம் ஆண்டு நடுவில் செஞ்சேனை பல பணிகளைக் கடந்து செல்ல வேண்டியிருந்தது. பலர் நோய்வாய்ப்பட்டனர். இஞ்சியும், மிளகாயும்தான் இதற்கான தடுப்பு மருந்து என்று அவைகளை பயன்படுத்தும்படி மாவோ கூறினார்.

இறுதியாக செஞ்சேனை ஆறாயிரம் மைல் தூரத்தை ஒரு வருடத்தில் கடந்து 1935-ம் வருடம் அக்டோபர் மாதம் யோனானை அடைந்தது. 12 மாநிலங்களையும் இருபது ஆறுகளையும் இது கடந்து செல்லவேண்டி இருந்தது.

தலைவர் மாவோ அவர்களே உங்களுக்கு நல்வரவு !

செஞ்சேனையே உனக்கு நல்வரவு !

சீனக் கம்யூனிஸ்ட கடசி நீடூழி வாழ்க!

என்ற பச்சை நிற, சிவப்பு நிற பதாகைகளை தாங்கிய பல்லாயிரக்கணக்கான மக்கள் வாத்திய முழக்கங்களுடன்

உற்சாக வரவேற்பு அளித்தனர். இற்றுப்போன ஓவர் கோட்டை அணிந்திருந்த மாவோ தன்னுடைய பழைய தொப்பியை எடுத்து மகிழ்ச்சியுடன் கூட்டத்தினரை வாழ்த்தினார்.

செஞ்சேனை வந்து சேர்ந்த இந்த யேனான் என்ற இடமானது சீனப் புரட்சியின் வெல்லமுடியாத தளமாக அமைந்தது. சீனாவை இறுதியாக விடுவிக்கும்படியான போராட்டம் இந்த மகத்தான இடத்திலிருந்து துவங்கியது.

## ஜப்பானின் ஆக்கிரமிப்பு

சீனாவின் கிழக்குப் பகுதியில் செஞ்சேனை உருவாகத் தொடங்கிய காலத்திலேயே, சீனாவின்மீது ஜப்பான் நாட்டின் படையெடுப்பு ஆரம்பிக்கத் துவங்கியது. நீண்டகாலமாகவே சீனாவை ஆக்கிரமித்து அதனுடைய இயற்கை வளங்களை கொள்ளையடிக்க வேண்டுவென்று திட்டம் தீட்டி வந்த ஜப்பான் 1931-ம் வருடம் செப்டம்பர் மாதம் 18-ம்.தேதி மஞ்சூரியாவைத் தாக்கி பல இடங்களில் பிடித்தது. அதன்பின் 1932-ம் வருடம் ஜனவரி மாதம் ஜப்பான் படைகள் ஷாங்காய் நகரைப் பிடித்தன. இவற்றைக் கண்ட சீன மக்கள் ஆத்திரமடைந்தனர். சீன அரசாங்கமானது ஜப்பானிய ஆக்கிரமிப்பாளர்களை விரட்டியடிக்காமல் சர்வதேச சங்கத்திற்கு மனு போட்டுக் கொண்டிருந்ததுதான் சீன மக்களுக்கு பெரும் ஆத்திரத்தை ஏற்படுத்தியது. அவர்கள் ஜப்பானியப் பொருட்களை வாங்க மறுத்தனர். ஜப்பானியர்களுக்கு பொருட்களை விற்க மறுத்தனர். ஜப்பானிய நிறுவனங்களோடு பணப் புழக்கம் வைத்துக்கொள்ள முடியாது என்று சீனாவின் வங்கி முதலாளிகள் கூறினார்கள். ஜப்பானை எதிர்த்து லட்சக்கணக்கான சீன இளைஞர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினர். இவற்றைக் கண்டு ஆத்திரமடைந்த ஜப்பானியர் சீனாவின் ஒரு சுதேசி தொழிற்சாலையை தரைமட்டமாக்கினர். ஜப்பான் தன் யுத்தக் கப்பல்களை ஷாங்காய்க்கு அனுப்பியது. அவைகள் தங்கள் பீரங்கிகளை சீனாவின் பிரபலமான நூலகங்கள்மீது திருப்பிக் குண்டுகளை ஏவி நாசம் விளைவித்தது. சீன அரசாங்கம் தனது படைகளை ஷாங்காயிலிருந்து திரும்பி வரும்படி உத்தரவிட்டது. சீன அரசாங்கத்தின்

பலவீனத்தையும் அதனுடைய சமரசம் செய்து கொள்ளும் போக்கையும் அறிந்துகொண்ட ஜப்பானிய ஏகாதிபத்தியவாதிகள் சீனாவின் ஜிஹோல், ஹோப்பே, சாஹர், ஷான்ஷி, ஷண்டுங் ஆகிய மாநிலங்களை கைப் பற்றினர். இவை அனைத்தும் நெல், கோதுமை பருத்தி போன்றவை செழித்து வளரும் மாநிலங்கள்; நிலக்கரி, இரும்பு போன்ற உலோகப் பொருட்களும் ஏராளமாகக் கிடைக்கும் மாநிலங்கள்.

தெற்குச் சீனாவில் தன்னுடைய நேரடி ஆட்சியை நடத்த முடியாதென்று கண்ட ஜப்பான், அங்குள்ள மாநிலங்களை சுதந்திர நாடுகளாக ஸ்தாபிப்பதாக கூறியது. அந்த முயற்சியும் தோல்வியடைந்தபின் வட மேற்குப் பக்கம் தனது பார்வையைத் திரும்பியது. மங்கோலியாவிற்கு தெற்கே உள்ளே மூன்று மாநிலங் களை ஒன்று சேர்த்து ஒரு மங்கோலிய நாட்டை உருவாக்குவதாக அறிவித்த ஜப்பான், ஒரு மங்கோலிய ராணுவப் பிரபுவை ஏவிவிட்டு சில மாநிலங்களைக் கைப் பற்றும்படி செய்தது. இதே சமயத்தில் சீனாவுடன் சமரசம் பேச ஜப்பான், சில பிரதிநிதிகளை அனுப்பியது. சீனா தனது சந்தைகளை ஜப்பானுக்கு திறந்துவிட வேண்டும், சீனாவில் வளர்ந்து வரும் கம்யூனிசக் கொள்ளை நோயை ஒழித்துக்கட்டவேண்டும், இந்த இரண்டையும் சீனா ஏற்றுக் கொள்ளுமானால் ஜப்பான் தொல்லை தராது என அது நப்பாசை காட்டியது.

சியாங் கே சேக் கம்யூனிஸ்டுகளை ஒழித்துக் கட்டு வதில் ஆர்வமாயிருந்தான்; ஜப்பானை எதிர்ப்பதில் தயக்கம் காட்டினான். அதேபோல் சீன அரசாங்கத்தின் பிரதமராக இருந்த வாங்-சிங்-மெய் என்பவனும் ஜப்பானுக்கு இணங்கிச் செல்வதிலேயே விருப்பம் கொண்டிருந்தவன்.

ஆனால் ஜப்பானை எதிர்த்துப் போராடமல் இருச்கிற சீன அரசாங்கத்தின்மீது மக்களுடைய கோபம் அதிகரித்தது.

''ஜப்பானுக்கு இதுவரைவிட்டுக்கொடுத்தது போதும்; இனிமேல் எதையும் விட்டுக் கொடுக்கக் கூடாது. ஜப்பானுக்கு விரோதமாயுள்ள எல்லா தேசிய சக்திகளையும் ஒன்று திரட்டி இந்த ஆக்கிரமிப்பைத் தடுத்து நிறுத்த வேண்டும்.'' என்று சன் யாட் சென்னின் மனைவியான திருமதி சிங் லிங் உள்ளிட்டு பல சீனப் பிரமுகர்கள் 1934-ம் வருடம் ஆகஸ்ட் மாதம் ஒரு அறிக்கையை வெளியிட்டர். ''கம்யூனிஸ்ட்டுகள்மீது நடத்தப்பட்டு வரும் யுத்தத்தை உடனே நிறுத்தவேண்டும், ''சீனர்கள் சீனர்களையே கொல்லக் கூடாது'' என்ற முழக்கம் சீனா முழுவதிலும் எதிரொலிக்க ஆரம்பித்தது.

1935-ம் வருடம் நவம்பர் மாதம் நான்சிங் அரசாங்கப் பிரதமாயிருந்த வாங் சிங் மெய், அவனுடைய ஜப்பான் ஆதரவுப் போக்கு காரணமாக சுடப்பட்டு காயமடைந்தான். இதனால் அதன் ராணுவத் தளபதியாக இருந்த சியாங் கே சேக் பிரதம மந்திரி பதவியையும் ஏற்றுக்கொண்டான். தொடர்ந்து கம்யூனிஸ்டுகளை ஒழித்துக் கட்டுவதிலும் ஐப்பானுடன் சமரசப் பேச்சு வார்த்தை நடத்துவதிலுமே அவன் ஆர்வம் காட்டினான்.

ஜப்பானின் ஆக்கிரமிப்பை ஒழித்துக்கட்ட சீனக் கம்யூனிஸ்ட் கட்சி திட்டம் தீட்டியது. 1935ம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் வடக்கு சான்ஸி பகுதியிலுள்ள ஓர் இடத்தில் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக்குழு கூடியது. ஜப்பானிய எதிர்ப்பு தேசிய ஐக்கிய முன்னணியை உருவாக்குவது சம்பந்தமான கொள்கையையும் யுக்திகளையும் இந்தக் கூட்டம்

தீர்மானித்தது. இந்தக் கூட்டத்திற்குப் பின் கட்சியின் தீவிர ஊழியர் மாநாடு ஒன்று நடைபெற்றது. அதில் ''ஜப்பானிய ஏகாதிபத்தியத்திற்கு எதிரான யுக்திகளை குறித்து'' மாவோ ஒரு பேருரை நிகழ்த்தினார். அதில் ஜப்பானிய — எதிர்ப்பு தேசிய ஐக்கிய முன்னணியின் கோட்பாடு மற்றும் நடைமுறைக் கொள்கைகள் மாவோ முறையான வரையறுத்துக் கூறினார்.

1936ம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் செஞ்சேனையின் நாலாவது பிரிவும் இரண்டாவது பிரிவும் முதல் பிரிவு செஞ்சேனையுடன் சேர்ந்தன. இவ்வாறு வரலாற்றுப் பிரசித்தி பெற்ற நெடும்பயணம் முடிவுற்று செஞ்சேனையின் மூன்று பிரிவும் ஒன்று சேர்ந்தன.

அவ்வாண்டு டிசம்பர் மாதத்தில் சீனாவையே வியக்க வைத்த ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. சியாங் கே சேக் ஜப்பானிய ஆக்கிரமிப்பை எதிர்த்து தீவிரமாகப் போராட மறுத்து வந்ததாலும், கம்யூனிஸ்ட்கள் மீதே தாக்குதல் தொடுத்து வந்ததாலும் மற்றும் உள்நாட்டு யுத்தத்திலேயே அவன் ஆர்வமாய் இருந்ததாலும் கோமிண்டாங் படையிலிருந்த சில தேசபக்த உள்ளம் கொண்ட படைத் தலைவர்கள் அவன் மீது ஆத்திரம் கொண்டனர். அவனை ஒழித்துக் கட்டாமல் எந்த மாற்றமும் வராது, என்று கருதி சியாங் கே சேக்கை கைது செய்து சிறையில் அடைத்தனர். சில கோரிக்கைகளுக்கு இணங்கும்படி அவனைக் கேட்டனர். கம்யூனிஸ்ட்டுகளுடன் சமரசமாகப் போகவேண்டும், சீன அரசாங்கத்தை அனைத்துக் கட்சியினரும் பங்கேற்கும் வகையில் மாற்றி அமைக்கவேண்டும், ஜப்பானின் ஆக்கிரமிப்பை தீவிரமாக எதிர்க்க வேண்டும் மக்களுக்கு எழுத்துரிமை பேச்சுரிமை அளிக்கவேண்டும், அரசியல் கைதிகள் விடுவிக்க வேண்டும்.

சீனாவின் சுதந்திரத்தை ஆதரிக்கும் நாடுகளுடன் நட்புறவு ஒப்பந்தங்கள் செய்து கொள்ள வேண்டும். ஆகிய கோரிக்கைகளை ஏற்கும்படி படைத்தலைவர்கள் சியாங் கே சேக் கிடம் கூறினார். அவன் இதை ஏற்கவில்லை.

சியாங் கே சேக்கை கொன்று விடுவதா அல்லது வேண்டாமா என்பது குறித்து அந்த ராணுவத் தலைவர்களுக்குள் விவாதம் நடந்தது. அவர்கள் மாவோவின் ஆலோசனையைக் கேட்டார்கள், மாவோவும் சூ என் லாயும் சியாங் கே சேக்கை உடனடியாக விடுதலை செய்யவேண்டுமென்று கூறினார்கள்; சியாங் கே சேக்கை கொன்றால் அது நாட்டிலே பிளவை உண்டுபண்ணி ஜப்பானிய ஆக்கிரமிப்பை மேலும் பலப்படுத்திவிடும் என்று தங்கள் கருத்தை வெளிப்படுத்தினர். இதன் காரணமாக சியாங் கே சேக் விடுதலைசெய்யப்பட்டான் இந்த நிகழ்ச்சியானது சீனாவில் மாவோ, சூ என் லாய் குறித்த மதிப்பையும் மிகப்பெரும் அளவுக்கு உயர்த்தி விட்டது, கம்யூனிஸ்ட்டுகளுடன் ஒன்றுபட்டு ஜப்பானை எதிர்க்கவேண்டும் என்ற முழக்கம் சீன அரசாங்கத்துக்கு நிர்ப்பந்தத்தை உண்டு பண்ணியது, எல்லா நகரங்களிலும் இதே முழக்கங்களுடன் மிகப்பெரும் ஆர்ப்பாட்டங்கள், ஊர்வலங்கள் நடைபெற்றன.

1937-ம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் கோமிண்டாங் கட்சியின் நிர்வாகக் குழுக் கூட்டம் நடைபெற்றது. இந்த கூட்டத்திற்கு கம்யூனிஸ்ட் கட்சி சில ஆலோசனைகளை அனுப்பி இருந்தது. கம்யூனிஸ்ட் கட்சி மீதான தாக்குதலை நிறுத்த வேண்டும, ஜப்பானிய ஆக்ரமிப்பை ஆயுதம் கொண்டு எதிர்க்க வேண்டும், மக்களுககு ஜீவாதார உரிமை, அரசியல் கைதிகள் விடுதலை, மககள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த திட்டங்கள் போன்ற ஆலோசனைகளை கம்யூனிஸ்ட் கட்சி முன் வைத்தது.

ஆனால் கோமிண்டாங் கட்சியின் நிர்வாகக்குழுக்கூட்டம் இதை ஏற்கவில்லை. கம்யூனிஸ்ட்டுகளை குற்றம் கூறி தீர்மானம் நிறைவேற்றியது. ஆனால் கம்யூனிஸ்ட்டுகள் இதைக்கண்டு சோர்வடையவில்லை. ஒரு தூதுக்குழுவை அனுப்பி சியாங் கே சேக்குடன் விவாதம் நடத்தினர். பின்னர் கம்யூனிஸ்ட் கட்சிக்கும், கோமிண்டாங் கட்சிக்குமிடையே ஒரு உடன்பாடு ஏற்பட்டது.

1936-37-ம் வருடங்களில் மார்க்சீய லெனினீய ஒளியில் சீனப் புரட்சியின் அனுபவத்தை மாவோ தொகுத்துக் கூறினார். 1936-ம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் ''சீனப் புரட்சிகர யுத்தத்தில் நீண்ட காலநடைமுறைக் கொள்கையின் பிரச்சனைகள்'' என்ற பிரசுரத்தை அவர் எழுதினார். அதில் சீனப் புரட்சிகர யுத்தத்தின் குணம்சங்கள், விதிகள் நீண்டகால மற்றும் உடனடி நடைமுறைக் கொள்கைகள் ஆகியவற்றை விவரித்ததுடன் ராணுவ விஷயங்களில் இடது அதி தீவிர போக்குகளை அவர் கடுமையாக விமர்சித்தார். 1937-ம் ஆண்டு கோடைகாலத்தில் அவர் மிகப் பிரசித்தி வாய்ந்த ''நடைமுறை குறித்து'', ''முரண்பாடு குறித்து ஆகிய இரு பிரசுரங்களை எழுதினார். மிகச் சிறந்த இந்த தத்துவார்த்த நூல்களில் அவர், தத்துவார்த்தக் கண்ணோட்டத்திலிருந்து சீனப் புரட்சியின் அடிப்படையான அம்சத்தை அவர் சுருக்கித் தந்தார்; அத்துடன் அறிதல் மற்றும் இயக்கவியல் போன்ற மார்க்சியக் கோட்பாட்டைப் பயன்படுத்தி, கம்யூனிஸ்ட் கட்சிக்குள் காணப்படும் அகநிலைவாதத் தவறுகளை குறிப்பாக வறட்டுத் தத்துவக் கோட்பாடுகளை அம்பலப்படுத்தி விமர்சித்தார்.

# பெத்தூன், கோட்னிஸ் எல்லையை கடந்த தியாகம்

டாக்டர் நார்மன் பெத்தூன் கனடா நாட்டை சேர்ந்த புகழ்பெற்ற மருத்துவர். முற்போக்கான சிந்தனையோட்டம் கொண்டவர். சீனப் புரட்சிப் படைகளுக்கு உதவிபுரிவதற்காக அவர் 1938-ம் ஆண்டு சீனாவிற்கு வந்தார், மாவோ அவரை மிகுந்த தோழமை யுடன் வரவேற்று உரையாடினார். போர்க்களத்தில் படுகாயமடையும் செஞ்சேனை வீரர்களுக்கு உடனுக் குடன் அறுவை சிகிச்சை செய்ய முடிந்தால் 75 சதவீதம் பேரை காப்பாற்ற முடியுமென்றும் அதற்காக யுத்த களத்தை ஒட்டி எளிதில் மாற்றக்கூடிய அறுவைசிகிச்சை நிலையங்கள் ஏற்பாடு செய்யலாமென்றும் டாக்டர் பெத்தூன் மாவோவிடம் கூறினார்.

இது மாவோவிற்கு மிகுந்த மகிழ்ச்சியளித்தது. பெத் தூனிற்குத் தேவையான உதவிகள் செய்வதாக வாக் களித்தார். செஞ்சேனையில் படுகாயமடையும் வீரர் களுக்கு உடனுககுடன் அறுவை சிகிச்சை செய்ய முடியாததால் ஏராளமானோர் மாண்டு வந்தனர். எனவே பெத்தூனின் யோசனையை மாவோ பெரிதும் வரவேற்றார்.

மூன்று மணி நேரத்திற்கும் அதிகமாக நள்ளிரவில் மாவோவுடன் உரையாடிய பெத்தூன், மாவோவின் கூரிய அறிவுத்திறன், பொறுமை, உறுதி கண்டு மகிழ்ச்சியடைந்தார். மாவோவுடன் நடத்திய உரை யாடல் குறித்து தனது நாட்குறிப்பில் பெத்தூன் பின் வருமாறு குறிப்பிடுகிறார் :

''அந்த அறையில் மாவோவுக்கு எதிரில் உட்கார்ந்து அவருடைய அமைதியான விமர்சனங்களைக் கேட்டுக் கொண்டிருந்தபொழுது நான் கடந்த காலத்திய நீண்ட பயணம் தெற்கிலிருந்து கம்யூனிஸ்ட்களுக்கு தலைமை தாங்கி மாவோவும், சூடேயும் மலைகளைக் கடந்து சென்றதையும் மீண்டும் நினைத்துப் பார்த்தேன். அன்று அவர்கள் வகுத்த நீண்டகால நடைமுறைக் கொள்கை தான் இன்று ஜப்பானியர்களை கெரில்லா யுத்தத்தில் சிதறடித்து வருகிறது; எதிரியின் வல்லமைமிக்க ஆயுதங் களை வலிவற்றதாக்கி சீனாவைக் காப்பதற்காக வழி வகுத்துள்ளது. தன்னைச் சந்திக்க வருபவர்களை எவ்வாறு மாவோ ஆகர்ஷிக்கிறார் என்பதை இப்பொழுதுதான் நான் புரிந்துகொண்டேன். அவர் ஒரு மாபெரும் மனிதன்! நமது உலகின் மகத்தான மனிதர் களில் அவரும் ஒருவர்.

மாவோவினால் பெரிதும் ஆகர்ஷிக்கப்பட்ட பெத்தூன், செஞ்சேனை வீரர்களைக் காப்பாற்ற இரவு பகலாகப் பாடுபட்டார். ஒருமுறை கையுறை இல்லாமல் அறுவை சிகிச்சை செய்தபொழுது கிருமிகளால் பீடிக்கப் பட்ட டாக்டர் பெத்தூன் அதன் காரணமாக 1939ம் ஆண்டில் மடிந்து போனார்.

இதைஅறிந்த மாவோ மிகுந்த வேதனையடைந்தார். ''நார்மன் பெத்தூன் நினைவாக'' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதி பெத்தூனுக்கு புகழாரம்சூட்டினார்.

1938ம் ஆண்டில் ''ஜப்பானுக் கெதிரான கெரில்லாப் போரின் யுத்த தந்திரப் பிரச்சனைகள்'' ''நீடித்த யுத்தம்'' போன்ற ராணுவ சம்மந்தப்பட்ட கட்டுரைகளை மாவோ எழுதினார், அதில் நீடித்த யுத்தம் குறித்து கட்சியின் ஒட்டுமொத்தக் கொள்கையை முறையாக விளக்கினார். அத்துடன் ''துரித வெற்றி''

போன்ற தவறான கோட்பாடுகளையும் அவர் விமர்சித்தார். கட்சிக்குள்ளும் வெளியேயும் கெரில்லாப்போர் முறையின் முக்கியத்துவத்தைக் குறைத்து மதிப்பிடும் போக்கையும் மாவோ விமர்சித்தார்.

அவ்வாண்டு செப்டம்பர் முதல் நவம்பர் மாதம் வரை நடைபெற்ற சீனக் கம்யூனிஸ்ட்கட்சியின் ஆறாவது மத்தியக் கமிட்டியின் ஆறாவது விரிவுபடுத்தப்பட்ட கூட்டத்தில் மாவோ பேருரை நிகழ்த்தினார். கட்சியினுடைய சுயேச்சைத் தன்மையை பாதுகாப்பது, ஐக்கிய முன்னணியைக் கட்ட முன் முயற்சி எடுப்பது போன்றவை குறித்து கட்சியின் கொள்கையை மாவோ உறுதிப் படுத்தினர். மார்க்சிய-லெனினிய கோட்பாட்டைக் கற்பதை கட்சி முழுவதும் ஒரு கடமையாகக் கொள்ள வேண்டுமென்று மாவோ கூறினார். அந்தக் கோட்பாடுகளை வறட்டுத்தனமாகப் பின்பற்றாமல் சீனாவின் நிலைமைகளுக்கு ஏற்றார்போல் நடைமுறைப் படுத்தவேண்டும் என்று அவர் வலியுறுத்தினார்.

சீன மக்கள் மீது கொடூரமான தாக்குதலைக் கட்டவிழ்த்துவிட்ட ஜப்பானிய ஏகாதிபத்தியம், வரலாறு இதுவரையில் கண்டறியாத கொடுமைகளைப் புரிந்தது. அதை எதிர்த்துப் போரிட முடியாமல் சரணடைந்த ஆயிரக்கணக்கான கோமிண்டாங் துருப்புகளை ஜப்பானிய ராணுவம் ஈவிரக்கமின்றி இயந்திரத் துப்பாக்கிகளால் சுட்டுக் கொன்றது. அதன் படை நுழைந்த இடங்களில் உள்ள கடைகளும் வீடுகளும் கொள்ளையடிக்கப்பட்டன. பெண்கள் கற்பழிக்கப்பட்டனர். அதற்குப்பின் அவர்கள் அங்கஹீனப்படுத்தப்பட்டனர்.

## டாக்டர் கோட்னிஸ்

1938ம் ஆண்டில் இந்தியா முழுவதிலும் சீன உதவிக்கான இயக்கம் பலமாக நடைபெற்று வந்தது. ஜப்பானியரை எதிர்த்து போராடும் சீன மக்களுக்கு உதவுவதற்காக தெரு முனைகளிலும் சந்து பொந்துகளிலும் கலாச்சார நிகழ்ச்சிகள் நடைபெற்றன. பணவசூல் செய்யப்பட்டது.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி, டாக்டர் துவாரக நாத் கோட்னிஸ் உள்ளிட்ட ஐந்து உறுப்பினர்களைக் கொண்ட மருத்துவர் குழுவை சீனாவிற்கு அனுப்பி வைத்தது.

இந்த குழுவினர் மாசேதுங்கைச் சந்தித்து உரையாடினர். இவர்களின் தன்னலமற்ற தியாகப் பணியை மாவோ பெரிதும் பாராட்டினார்.

நான்கு வருடங்கள் இரவு பகல் பாராது பாடுபட்ட டாக்டர் கோட்னிஸ் 1942ம் ஆண்டு டிசம்பர் 8ந் தேதி காலமானார். ''அதிகமான வேலையின் காரணமாக அவர் நோயுற்று இறந்தார்; ராணுவம் ஒரு சிறந்த வீரனையும், சீன நாடு ஒரு நண்பனையும் இழந்து விட்டது'' என்று சீன செஞ்சேனையின் தளபதி சூடே, டாக்டர் கோட்னிஸீக்கு புகழஞ்சலி செலுத்தினார்.

டாக்டர் கோட்ஸின் மறைவு குறித்து அறிந்த மாவோ மிகவும் வேதனையடைந்தார். கோட்னிஸ் குடும்பத்திற்கு தன் கைப்பட ஒரு கடிதம் எழுதி அனுப்பினார். அதில் குறிப்பிட்டதாவது :

''ஜப்பானிய எதிர்ப்பு யுத்தத்தின் மிக மோசமான காலததில் எங்களுக்கு மருத்துவர்களின் உதவியும், மருத்துவக் கருவிகளும் மிகவும் தேவைப்பட்டபோது உங்கள்

சகோதரர் எங்கள் நாட்டுக்கு வருகை தந்து, மகத்தான மனிதாபிமான செயலை செய்தார். உங்கள் சகோதரர் மனிதத்தன்மையும், சர்வதேசியத்தையும் கடைபிடிப் பதை நான் நேரடியாக கண்டவன். பல்வேறு தடைகளை யும் மீறி எங்களது படைவீரர்களை மரணத்தினின்றும் அவர் காப்பாற்றினார். ஜப்பானிய எதிர்ப்பு போரின் பின் பகுதியில் உங்கள் சகோதரருடன் நான் நீண்ட நாட்கள் பணிபுரிந்தேன். உங்கள் சகோதரரை எனது உயிருக் குயிரான தோழராக கருதுவதற்கு எனக்கு உரிமையுள்ள தென்றே நான் கருதுகிறேன். எனது உள்ளத்தின் ஒரு பகுதியாக மாறிவிட்ட உங்கள் சகோதரர் இன்று நம்மை விட்டு என்றைக்குமாகப் பிரிந்துவிட்டார். ஊக்கத்துட னும் துணிவு மனப்பாங்குடனும் எல்லாத் துன்பங்களை யும் வென்ற அவரது நினைவு என்றென்றும் என் நினைவி லிருக்கும். புரட்சிகர சீன மக்களின் இதயத்தில் உங்கள் சகோதரர் எப்போதும் வாழ்வார்''

# ஜப்பானிய எதிர்ப்பு யுத்தம்

**மா**வோவின் வழிகாட்டலின் கீழ் சீன கம்யூனிஸ்ட் கட்சி, ஜப்பானிய எதிர்ப்பு யுத்தத்தில் மக்களை ஈடுபடுத்தியது. அவர்களை ஜப்பானுக்கெதிரான கெரில்லா யுத்தத்தில் ஈடுபடுத்தியது. ஜப்பானிய எதிர்ப்பு தளங்களை உருவாக்கியது. இத்தகைய தளங்களில் ஒரு சில மட்டுமே தரைப்பகுதியில் இருந்தன. இதர பெரும்பாலான தளங்கள் மலைக்குன்றுகளில் அமைக்கப்பட்டன. அவ்வாண்டு அக்டோபர் மாதத்தில் ஊஹான் நகரை ஜப்பானியப் படைகள் பிடித்த பின்பு அந்தப் படை சீனக் கம்யூனிஸ்ட் கட்சி உருவாக்கியிருந்த தளங்கள் மீது தன் தாக்குதலைத் திருப்பியது. இதே சமயத்தில் கோமிண்டாங் கட்சியின் கடைந்தெடுத்த கம்யூனிஸ்ட்—எதிர்ப்பு பேர்வழிகள் இந்த கம்யூனிஸ்ட் தளங்கள்மீது தங்களது பொருளாதார முற்றுகையை இறுக்கத் தொடங்கினர். இவை அனைத்தின் விளைவாக இந்த கம்யூனிஸ்ட் தளங்கள் 1941-ம் ஆண்டு வாக்கில் கடுமையான பொருளாதார சிரமங்கள் எதிர்நோக்க வேண்டியிருந்தது. இதை சமாளிப்பதற்கு மாவோவும் கட்சியின் மத்தியக் குழுவும் ஒரு அறைகூவல் விடுத்தனர். இந்தப் பகுதியிலுள்ள ராணுவத்தினரும், மக்களும் தாங்களே பாடுபட்டு போதுமான அளவுக்கு தானியங்களையும், துணிகளையும் உற்பத்தி செய்து அதை ஒரு மகத்தான உற்பத்தி இயக்கமாக கொண்டு செல்ல வேண்டுமென்று அறைகூவல் விடுத்தனர். இந்த வழியின்மூலம் கடுமையான பொருளாதார மற்றும் நிதி நெருக்கடிகள் சமாளிக்கப்பட்டன.

1939-ம் ஆண்டு முதல் 40-ம் ஆண்டு வரையிலான காலத்தில் மாவோ பல பிரசுரங்களை எழுதினார்.

''கம்யூனிஸ்ட்டை அறிமுகப்படுத்துவது,'' ''சீனப் புரட்சியும் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியும்,'' ''புதிய ஜன நாயகம் குறித்து,'' போன்ற புகழ்பெற்ற பிரசுரங்களில் புதிய ஜனநாயகம் குறித்த அடிப்படையான கோட்பாடு களை விளக்கியதோடு ஜனநாயகப் புரட்சியில் பாட்டாளி வர்க்கத்தின் தலைமை குறித்த மார்க்சிய—லெனினிய கோட்பாட்டை மேலும் விவரித்தார். புதிய ஜனநாயகப் புரட்சியின் இலக்குகள், கடமைகள், இயக்கும் சக்தி, தன்மை மற்றும் எதிர்கால வாய்ப்புகளை திட்டவட்டமாக விவரித்த மாவோ, புதிய ஜனநாயகப் புரட்சியின் அரசியல், பொருளாதார மற்றும் கலாச்சாரத் திட்டத்தை உருவாக்கினார். அத்துடன், ஐக்கிய முன்னணி, ஆயுதப் போராட்டம் மற்றும் கட்சியைக் கட்டுவது ஆகிய மூன்றுதான் சீனப்புரட்சியின் முப்பெரும் அற்புதக் கருவிகளாகும் என்று அவர் சுட்டிக் காட்டினார்.

1942-ம் ஆண்டில் ஜப்பானியர்களுக்கெதிரான போருக்கு தலைமை தாங்கி வழிகாட்டிக்கொண்டே கட்சிக்குள் தவறைத் திருத்தும் இயக்கத்தை மாவோ துவக்கி வைத்தார். அச்சமயத்தில் கட்சி உறுப்பினர்களுக்கு மார்க்சிய—லெனினிய தத்துவார்த்தக் கல்வியை விரிந்த அளவில் நடத்தவும், அகநிலை வாதம், குறுங்குழு வாதம் போன்ற போக்குகளை முறியடிக்கவும், விவரங்களில் இருந்து உண்மைகளைக் கண்டறியக்கூடிய தத்துவார்த்தக் கோட்பாட்டை வலியுறுத்துவதற்கும், கோட்பாட்டை நடைமுறையுடன் இணைக்கச் செய்வதற்கும் வழிகாட்டப்பட்டன. இந்த தவறை களையும் இயக்கமானது. கட்சிக்குள் இருந்த வாங்மிங் என்ற இடது அதிதீவிர வாதியின் செல்வாக்கை அகற்ற உதவியதோடு கட்சியில் முன்னெப் போதும் கண்டிராத அளவுக்கு தத்துவார்த்த, அரசியல் மற்றும் ஸ்தாபன ஒற்றுமையை பலப்படுத்தியது.

இந்த மகத்தான உற்பத்தி இயக்கமும், கட்சிக்குள் தவறைக் களையும் இயக்கமும் சேர்ந்து ஜப்பானிய—எதிர்ப்பு இயக்கத்தில் வெற்றிக்கான பொருளாதார மற்றும் தத்துவார்த்த அடித்தளத்தை உருவாக்கித் தந்தன.

1943-ம் ஆண்டு மார்ச் மாதத்தில் சீனக் கம்யூஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக் குழுவின் தலைவராக மாவோ தேர்ந்தெடுக்கப்பட்டார். 1945ம் ஆண்டு ஏப்ரல்-ஜூன் மாதங்களில் நடைபெற்ற சீன கம்யூனிஸ்ட் கட்சியின் ஏழாவது தேசியக் காங்கிரசுக்கு மாவோ தலைமை வகித்து ''கூட்டணி அரசாங்கம்'' குறித்தும் இதர விஷயங்கள் குறித்தும் விளக்கவுரை நிகழ்த்தினார். அதில் ஜப்பானிய — எதிர்ப்பு யுத்தத்தின் அனுபவத்தை அவர் சுருக்கித் தந்ததுடன் மக்களை துணிவுடன் திரட்டுவது, மக்கள் படைகளை விரிவுபடுத்துவது, கட்சியின் தலைமையின் கீழ் ஜப்பானிய ஆக்கிரமிப்பாளர்களை முறியடித்து நாடு முழுவதுமுள்ள மக்களை விடுதலை செய்து ஒரு புதிய ஜனநாயக சீனாவைக் கட்டுவது என்ற அரசியல் வழியை மாவோ உருவாக்கித் தந்தார். மேலும் கட்சியின் அடிப்படையான கொள்கைகளை விளக்கிக் கூறிய மாவோ தத்துவத்தை நடைமுறையுடன் இணைப்பது, மக்களுடன் நெருங்கிய தொடர்புகள் ஏற்படுத்திக் கொள்வது, சுய விமர்சனம் என்பதைக் கடைப்பிடிப்பது என்ற சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் மூன்று முக்கியமான வேலை முறைகளை விளக்கிப் பேசினார். இந்த மாநாட்டில்தான் மார்க்சிய — லெனினிய அடிப்படைக் கோட்பாடுகளை சீனப்புரட்சியின் எதார்த்தமான உண்மைகளோடு இணைத்த 'மாசேதுங் சிந்தனை' உருப்பெற்று அது சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் வழிகாட்டும் தத்துவமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. கட்சியின் ஏழாவது மத்தியக்கமிட்டியின் முதல் துவக்கக் கூட்டத்தில் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டியின் தலைவராக

மாவோ தேர்ந்தெடுக்கப்பட்டார். அதிலிருந்து தொடங்கி அவருடைய வாழ்நாள் முழுவதும் அவர் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவராகவே இருந்தார்.

சீனாவிற்குள் ஜப்பானிய ஆக்கிரமிப்புப் படைகள் நகரங்களையும் கிராமங்களையும் நாசம் செய்துகொண்டிருந்தன. ஜப்பானியரை எதிர்த்து செஞ்சேனை மட்டுமே தீரத்துடன் போராடி ஏராளமான மக்களை ராணுவ வீரர்களாக்கி மக்கள் விடுதலைப் படையை உருவாக்கி வந்தது. அதே சமயத்தில் ஊசலாட்டப் பேர்வழி சியாங் கே சேக்கின் தலைமையிலிருந்த கோமிண்டாங் படைகள் ஜப்பானியப் படைகளால் நிர்மூலமாக்கப்பட்டன. ஜப்பானியப் படைகள் தாங்கள் ஆக்கிரமித்த பகுதிகளில் தங்கள் அடிவருடியான வாங்-மிங்-சி என்பவனின் தலைமையில் ஒரு பொம்மை அரசாங்கத்தை அமைத்தது.

1942-ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் உலகத்தையே வியக்க வைத்த ஒரு மகத்தான செய்தி மாஸ்கோவிலிருந்து வந்தது. சோவியத் யூனியனை கைப்பற்றுவதற்காக இட்லரால் அனுப்பப்பட்ட ஜெர்மானிய நாஜிப் படைகள் ஸ்டாலின் கிராடு நகரத்தில் அடிமேல் அடிவாங்கத் துவங்கின. 1942 நவம்பரிலிருந்து 1943 பிப்ரவரி வரை நடைபெற்ற இந்த மகத்தான போரில் சோவியத் செஞ்சேனை, மூன்று லட்சத்து முப்பதாயிரம் ஜெர்மானியத் துருப்புகளை ஒழித்துக்கட்டி ஸ்டாலின் கிராடைப் பாதுகாத்ததோடு நாஜித் துருப்புக்களை சோவியத் நாட்டிலிருந்து விரட்டியடிக்கத் துவங்கியது. ஓராண்டு காலத்திற்குள் சோவியத் நாடு முழுவதையும் ஆக்கிரமிப்பிலிருந்து விடுவித்த செஞ்சேனை தொடர்ந்து முன்னேறி ருமேனியா, பல்கேரியா, பின்லாந்து, ஹங்கேரி, போலந்து, யூகோஸ்லேவியா. செக்கொஸ்லோவோகியா மற்றும்

நார்வே ஆகிய நாடுகளை இட்லரின் ஆக்கிரமிப்பிலிருந்து விடுவித்தது. இத்தாலியில் முஸோலினியின் சர்வாதிகர ஆட்சி தூக்கியெறியப்பட்டது. சோவியத் யூனியனின் இந்த மகத்தான வெற்றியானது ஜெர்மனியின் ராணுவக் கூட்டாளியான ஜப்பானை ராணுவரீதியாகவும், அரசியல் ரீதியாகவும் தனிமைப்படுத்தியது, சீனாவில் ஜப்பானியர்களின் கட்டுப்பாட்டில் இருந்த பகுதிகளில் ஜப்பானிய—எதிர்ப்பு இயக்கம் வீறுகொண்டெழ ஆரம்பித்தது.

1944 ஏப்ரல் மாதத்தில் சீனக் கம்யூனிஸ்ட் கட்சி, கோமிண்டாங் கட்சியோடு ஒரு பேச்சு வார்த்தை நடத்தியது. ஆனால் கோமிண்டாங் கட்சியின் பிடிவாதத்தினால் அது பயனில்லாமல் போயிற்று.

சீனாவில் ஜப்பானுடைய ஆக்கிரமிப்பு நொறுக்கப் பட்டு வருவதையும், அது பின்வாங்குவதையும் கண்ட அமெரிக்கா, சீனாவைத் தான்பிடிக்க வேண்டுமென்பதற்காக ஒரு நாடகமாடியது. சீனக் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் கோமிண்டாங் கட்சிக்குமிடையே மத்தியஸ்தம் செய்து வைப்பதாகக் கூறி தன்னுடைய பிரதிநிதியாக ஹர்லே என்பவனை யோனானுக்கு அனுப்பி வைத்தது. ஒரு ஜனநாயகக் கூட்டு அரசாங்கத்தை உருவாக்குவது, ஒரு ஒன்றுபட்ட உயர் ராணுவத் தலைமையை உருவாக்குவது சம்பந்தமாக சீனக் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் அமெரிக்கப் பிரதிநிதிக்குமிடையே உடன்பாடு ஏற்பட்டது. யேனானிலிருந்து திரும்பிய ஹர்லே, சியாங்-கே-சேக்கைச் சந்தித்து அந்த உடன்பாட்டை அமுலாக்குவதற்குப் பதிலாக சியாங்-கே-சேக்கை கம்யூனிஸ்ட்களுக்கெதிராகத் தூண்டிவிட்டான். சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் ராணுவமானது, கோமிண்டாங் ராணுவத் தலைமையின் கீழோ அல்லது அமெரிக்கப் பிரதிநிதி தலைமைப் பதவி வகிக்கும் ஒரு மூவர் கமிட்டி

யின் கீழோ இருக்கவேண்டுமென்ற நிபந்தனை விதிக்கப்பட்டது. இந்த மூவர்கமிட்டி என்பது சீனக் கம்யூனிஸ்ட் கட்சி, கோமிண்டாங் கட்சி மற்றும் அமெரிக்கா ஆகியவற்றின் ஒவ்வொரு உறுப்பினரைக் கொண்டதாகும்.

இந்த துரோகத்தனமான சூழ்ச்சியை மாவோ நிராகரித்தார். அமெரிக்கா கடைப்பிடிக்கும் கொள்கையானது தற்சமயத்தில் ஜப்பானிய எதிர்ப்பு யுத்தத்திற்கு ஒரு தடையாக மாறும் என்றும் எதிர்காலத்தில் உலக சமாதானத்திற்கு தடையாக மாறும் என்றும் மாவோ எச்சரித்தார்.

இதைக் கண்டு ஆத்திரமடைந்த அமெரிக்காவின் பிரதிநிதி ஹர்லே, தனது அரசாங்கம் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியோடு ஒத்துழைக்காது என்றும் பலாத்காரத்தில் சீனாவை ஒற்றுமைப்படுத்துவதற்கு சியாங் கே ஷேக்கிற்கு உதவி புரியும் என்றும் பயமுறுத்திப் பார்த்தான்.

சீனாவை ஒரு அமெரிக்க காலனியாகவும், சோவியத் யூனியனுக்கு எதிரான ஒரு ராணுவ தளமாகவும் மாற்றுவது என்பது அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் ஒரு அடிப்படையான கொள்கையாக இருந்தது. இந்த ஏகாதிபத்திய நோக்கத்திற்காக, அமெரிக்க அரசாங்கம் உள்நாட்டு யுத்தத்தை நடத்துவதில் கோமிண்டாங்கிற்கு ஆதரவு கொடுத்தது. அதே சமயத்தில் அமெரிக்க உதவிக்கு கைமாறாக கோமிண்டாங் கட்சி தேசிய ஆதிபத்திய உரிமையை அடகு வைத்தது.

அமெரிக்க அரசாங்கம் ஏராளமான ராணுவத் தளவாடங்களை சியாங் கே ஷேக்கிற்கு கொடுத்து அவன் மீது தன் பிடியை இறுக்கத் துவங்கியது.

1945ம் ஆண்டு ஏப்ரல் 23ம் தேதியன்று சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் ஏழாவது தேசியக் காங்கிரஸ்

யேனானில் துவங்கியது. 12லட்சம் கட்சி உறுப்பினர் களைப் பிரதிநிதித்துவப் படுத்தும் 544 பிரதிநிதிகளும், 208 மாற்றுப் பிரதிநிதிகளும் இதில் கலந்து கொண்டனர் இந்த மாநாட்டில் மாவோ, ''கூட்டு அரசாங்கம் குறித்து'' என்ற தலைப்பில் ஓர் அரசியல் அறிக்கையை சமர்ப்பித்துப் பேசினார், ஏகாதிபத்தியமும், நிலப்பிரபுத் துவமும் சீன மக்களின்மீது செத்துபோன சுமையாகக் கிடக்கின்றன. சீன சமுதாயத்தின் அபிவிருத்தியை தடுத் துக்கொண்டிருக்கின்றன. ஆனால் சீனா முழுவதிலு முள்ள மக்கள் கம்யூனிஸ்ட்களோடு கூட்டு முயற்சிகளில் ஈடுபடுவார்களேயானால் இவ்விரு பெருமலைகளும் நிசயமாக அகற்றப்பட முடியும் என மாவோ தெளி வாகச் சுட்டிக்காட்டினார். ''நாம் நம் மக்களின்மீது சார்ந்து நிற்கும்வரையிலும், அவர்களுடைய தீர்ந்து விடாத படைப்புச் சக்தியை உறுதியாக நம்பி நிற்கும் வரையிலும், அதன் விளைவாக அவர்களை உறுதியாக நம்பி அவர்களோடு ஒன்றாக இருக்கும் வரையிலும் எந்த எதிரியும் நம்மை ஒழித்துவிட முடியாது ஆனால் நாம் எந்த எதிரியையும் ஒழிக்கமுடியும் எந்தக் கஷ்டத்தையும் சமாளிக்கமுடியும் என்பது ஒவ்வொரு தோழருக்கும் தெளிவுபடுத்தப்பட வேண்டும்.''

மாவோவின் பேருரைக்குப் பின் கட்சி மாநாடு தனது அரசியல் கடமையை பின்வருமாறு விவரித்தது:

''...ஜப்பானிய ஆக்கிரமிப்பாளர்களைத் தோற் கடித்து நமது கட்சியின் தலைமையின் கீழ் மக்கள் முழு வதையும் விடுதலை செய்துபுதியதொரு ஜனநாயக சீனாவை நிர்மாணிக்கும் பொருட்டு வெகு ஜனங்களை துணிவாக செயலில் ஈடுபட தட்டி எழுப்பி மக்களின் படைகளை பலப்படுத்த வேண்டும்...''

இரண்டாம் உலகப்போரின் இறுதியில் 1945ம்ஆண்டு மே 7ம்தேதி அன்று ஜெர்மானியப் படை சரணாகதி

அடைந்தது. ஆனால் உலகின் கிழக்குப் பகுதியில் அந்த ஜெர்மனியின் கூட்டாளியாக இருந்த ஜப்பான் ஆக்கிரமிப்பு யுத்தத்தை தொடர்ந்து நடத்தவே முடிவு செய்தது. எனவே யால்டாவில் நடைபெற்ற நேசநாடுகள் மாநாட்டில் ஜப்பானை ஒடுக்கவேண்டுமென்று சோவியத் யூனியனிடம் கேட்டுக்கொள்ளப்பட்டது. எனவே 1945 ஆகஸ்ட் 8ம்தேதி சோவியத் யூனியன், ஜப்பான் மீது யுத்தப் பிரகடனம் செய்தது. சோவியத் செஞ்சேனை தனது நான்கு படைப் பிரிவுகளை வடகிழக்குச் சீனா வுக்குள் அனுப்பி ஜப்பானியப் படைகளை விரட்ட ஆரம்பித்தது. ஜப்பானிய தளங்கள் அழிக்கப்பட்டன ஜப்பானிய அதிரடிப்படைகள் செயலிழந்தன. ஆகஸ்ட் 9-ம்தேதியன்று மாவோ ஒரு அறிக்கை வெளியிட்டார்: சீனாவிலிருந்த சகல ஜப்பானிய — எதிர்ப்பு சக்திகளும் நாடு முழுவதும் முன்னேறி ஜப்பானுக்கெதிரான தாக்கு தலை ஆரம்பிக்க வேண்டும்; விடுவிக்கப்பட்ட பகுதிகளை விரிவாக்க வேண்டும்: சோவியத் யூனியன் மற்றும் இதர நேசநாடுகளின் நடவடிக்கைகளோடு நெருக்கமாகவும் சக்தி வாய்ந்த முறையில் ஒருங்கிணைந்தும் எதிரியை எதிர்த்துப் போராட வேண்டும்; அவனுடைய பிடியிலிருக்கும் பகுதிகளை குறைக்கவேண்டும்; எதிரியின் செய்திப் போக்குவரத்துப் பாதைகளை உடைத்தெறியும் பொருட்டும், ஒழுங்கான ராணுவங்களின் நடவடிக்கை களுக்கு மக்கள் ஆதரவைத் திரட்டுவதற்காகவும் எதிரியின் பிடியிலுள்ள பகுதிகளுக்கு ஆயுதமேந்திய குழுக்களை அனுப்பவேண்டும்; எதிரியின் பிடியில் இருந்த பகுதிகளில் மக்கள் தலைமறைவுப் படைகள் அமைக்க வேண்டு மென்றும் ஆயுத எழுச்சிகளுக்கு தயார் செய்யவேண்டும் என்றும் வெளியிலிருந்து தாக்கும் ஒழுங்கான ராணுவத் தோடு சேர்ந்து எதிரியை நிர்மூலம் செய்ய வேண்டு மென்றும் மாவோ அறைகூவல் விடுத்தார்.

ஆகஸ்ட் 10-ம் தேதியன்று சீன செஞ்சேனையின் பிரதம தளபதி சூடே ஒரு உத்தரவு பிறப்பித்தார்:

போஸ்ட்டாம் பிரகடனத்திற்கு ஏற்ப ஜப்பானியப் படைகளும், கூலிப் படைகளும் தங்களது ஆயுதங்களைக் கீழே போட்டு செஞ்சேனையிடம் சரணாகதி அடையவேண்டுமென்று சூடே உத்தரவு பிறப்பித்தார்.

சோவியத் செஞ்சேனையின் மகத்தான வலிமையும், ஜப்பானிய ராணுவத்தை அது சிதறடித்ததும் அத்துடன் சீன செஞ்சேனையின் கிடுக்கிப்பிடித் தாக்குதலும் சேர்ந்து ஜப்பானிய அரசாங்கத்தை சரணடையும்படிச் செய்தது. 1945-ம் ஆண்டு ஆகஸ்ட் 15-ம் தேதியன்று ஜப்பான் நிபந்தனையற்ற சரணாகதி அடைந்தது.

இதற்கிடையில் ஆகஸ்ட் முதல் வாரத்தில், ஜப்பானிலுள்ள ஹிரோஷிமா மற்றும் நாகசாகி ஆகிய நகரங்கள்மீது அமெரிக்கா அணுகுண்டுகளை வீசியது. சோவியத் செஞ்சேனையானது ஜப்பானிய ஏகாதிபத்திய ராணுவத்தை சிதறடித்து முன்னேறிக் கொண்டிருக்கும் பொழுது, அமெரிக்காவானது சோவியத் யூனியன் உள்ளிட்ட உலக நாடுகளை அச்சுறுத்தவேண்டும் என்ற திமிரான போக்கில் இந்த அணுகுண்டுகளை வீசி லட்சக் கணக்கான அப்பாவி மக்களைக் கொன்று குவித்தது. இதன் காரணமாகத்தான் சரணடைந்தது என்று மார் தட்டிக் கொண்டது. ஆனால் சோவியத் செஞ்சேனையின் தீரமிக்க தாக்குதல்கள்தாம் ஜப்பானை சரணடையச் செய்தது என்பது வரலாற்று உண்மை,

# நவசீனம் மலர்ந்தது

1945-ம் ஆண்டு ஆகஸ்ட் 25-ம் தேதியன்று சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் குழு ''தற்போதைய நிலைமை குறித்து'' என்ற தலைப்பில் ஒரு பிரகடனத்தை வெளியிட்டது. சமாதானம், ஜனநாயகம் மற்றும் ஒருமைப்பாடு ஆகியவற்றின் அடிப்படையில் நாடு முழுவதிலும் ஒற்றுமையை உருவாக்கும்படி அது சீன மக்களை அறைகூவி அழைத்தது. அத்துடன் உள் நாட்டு யுத்தத்தைத் தவிர்ப்பதற்கான அவசரமான நடவடிக்கைகளையும் அந்தப் பிரகடனம் முன்வைத்தது. இந்தக் குறிக்கோள்களோடு மாவோ ஆகஸ்ட் 28-ம் தேதி சியாங்—கே-ஷேக்குடன் பேச்சு வார்த்தை நடத்துவதற்காக சுங்கிங் நகரத்திற்குச் சென்றார். அவருடன் சூ-என்-லாயும் சென்றார். மாவோ அந்த நகரத்திற்குச் செல்வதானது அவரது உயிருக்கே ஆபத்தை ஏற்படுத்தும் என்று பலர் அஞ்சியபோதிலும் மாவோ துணிந்து சென்றார். அக்டோபர் 10-ம் தேதியன்று சமாதானம் குறித்தும், தேசிய புனரமைப்பு குறித்தும் கோமிண்டாங் கட்சிக்கும் சீனக் கம்யூனிஸ்ட் கட்சிக்குமிடையே உடன்பாடு ஏற்பட்டது. இந்த உடன்பாடானது இரு தரப்பினரும் உள்நாட்டு யுத்தத்தை உறுதியாகத் தவிர்க்க வேண்டுமென்று வரையறுத்தது. சமாதானம் ஜனநாயகம், ஒருமைப்பாடு மற்றும் ஒன்றுபடுத்துதல் ஆகியவற்றின் அடிப்படையில் ஒரு சுயேச்சையான, சுதந்திரமான, செழுமையான மற்றும் சக்தி வாய்ந்த ஒரு புதிய சீனாவை நிர்மாணிப்பது என்று இந்த உடன்பாடு கூறியது. நாட்டின் சமாதானப் பூர்வமான நிர்மாணம் பற்றி விவாதிப்பதற்கு ஒரு அரசியல் கலந்தாலோசனை மாநாட்டைக் கூட்டுவது என்றும் இந்த உடன்பாடு

கூறியது. இந்த உடன்பாட்டிற்கு வருவதற்காக சீனா கம்யூனிஸ்ட் கட்சி, கோமிண்டாங் கட்சிக்கு பல சலுகை கொடுத்தது.

ஆனால் சியாங்-கே-சேக் அந்த உடன்பாட்டிற்கு விசுவாசமாக இல்லை. கம்யூனிஸ்ட்டுகள்மீது தாக்குதல் கொடுத்து அவர்களை ஒழிப்பதற்காக திட்டம் தீட்டினான். 1946-ம் ஆண்டு கோடைகாலத்தில் கம்யூனிஸ்ட்டுகள்மீது தனது படையை ஏவி அதன் மூலம் ஒரு உள்நாட்டுப் போரைக் கட்டவிழ்த்து விட்டான். அதைக் கண்ட மாவோ தற்காப்பு யுத்தத்தின் மூலம் கோமிண்டாங் படைகளை சிதறடிக்கும்படி சீன செஞ்சேனைக்கு அறைகூவல் விடுத்தார். அச்சமயம் மாவோ தன் மனைவியுடனும் இளம் மகளுடனும் யேனானிலுள்ள மலைக் குகை ஒன்றில் வசித்து வந்தார். அதை அடுத்தாற்போல் இருந்த குகைகளில் செஞ்சேனையின் பிரதம தளபதி சூடேயும், மற்றொரு முக்கியத் தலைவரான சூ—என்-லாயும் வசித்து வந்தனர்.

அச்சமயத்தில் சியாங் கே சேக்கிடம் 43 லட்சம் படைவீரர்கள் இருந்தனர். அவர்களுக்கு அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் உதவி பெருமளவில் இருந்தது. அவர்கள் கோமிண்டாங் துருப்புகளுக்கு பயிற்சிகொடுத்து ஆயுதபாணியாக்கி கம்யூனிஸ்ட்டுகள் வசம் இருந்த பகுதிகளைத் தாக்குவதற்கு அனுப்பி வைத்தார்கள். கோமிண்டாங்களுக்காக பெரிய நகரங்களைப் பாதுகாக்கவும், கம்யூனிஸ்ட்டுகளிடமிருந்து விடுவிக்கப்படும் பகுதிகளுக்குள் கோமிண்டாங் துருப்புகள் நுழைய உதவி செய்யும் பொருட்டும் அமெரிக்கத் துருப்புகள் சீனாவிற்குள் கொண்டு வரப்பட்டன. அமெரிக்க ஏராளமான ராணுவ தளவாடங்களை சியாங் கே சேக்கிற்கு உதவியாக அனுப்பி வைத்தது.

மறுபுறத்தில் சீன மக்கள் விடுதலைப் படையிடம் 12 லட்சம் போர்வீரர்கள் மட்டுமே இருந்தனர். அவர்கள்

வசமிருந்த பகுதிகளில் 13 கோடி மக்கள் வாழ்ந்து வந்த னர். சியாங் கே சேக் வசமிருந்த பகுதிகளில் 30 கோடி பேர் வாழ்ந்து வந்தனர்.

இந்த யுத்தம் ஆரம்பித்த ஓராண்டு காலத்திற்குள் 43 லட்சமாக இருந்த சியாங் கே சேக்கின் படை 37லட்ச மாகக் குறைந்தது. அதே சமயத்தில் 12 லட்சமாக இருந்த மக்கள் விடுதலைப்படை 20 லட்சமாக உயர்ந் தது. அவ்வாண்டு ஏப்ரல் மாதத்தில் கோமிண்டாங் படைகள் யேனானைத் தாக்கின. அதன் விமானங்கள் மாவோ தங்கியிருந்த மலைக்குன்றுகளின் மீது குண்டு களை வீசின. மாவோ, சூ என் லாய் தலைமையில் கட்சி யின் மத்தியக் குழுவும், மக்கள் விடுதலைப்படையின் தலைமையகமும் ஷான்சிக்கு வடக்கே மாற்றப்பட்டது. அங்கிருந்து கொண்டே விடுதலைப் போருக்கு வழிகாட்டி னர். படிப்படியாக சியாங் கே சேக் படைகள் தோல்வி யடையத் துவங்கின. விடுதலைப் படை கிராமம் கிராம மாக முன்னேறி அங்குள்ள துரோகிகளை ஒழித்துக்கட்டி வெற்றி நடை போட ஆரம்பித்தது. இதர தலைவர் களுடன் சேர்ந்து மாவோ பல படைப் பிரிவுகளுக்குத் தலைமை தாங்கி நேரிடையாக வழிகாட்டினார். விடுவிக்கப்பட்ட பகுதிகளில் நிலச் சீர்திருத்தம் செய்யப் பட்டு ஏழை, எளிய, நடுத்தர விவசாயிகளுக்கு அதைப் பிரித்துக் கொடுக்கும்படி வழிகாட்டியதுடன் அந்தப் பகுதிகளின் பொருளாதாரக் கட்டமைப்பிற்கும் மாவோ வழிகாட்டினார். இதனால் முன்னேறிச் செல்லும் விடுதலைப்படைக்கு பொருள் உதவியும் மக்கள் ஆதரவும் அதிகரித்தன. தினமும் ஆயிரக்கணக்கானோர் விடுதலைப் படையில் சேர்ந்து வந்தனர்.

1949-ம் ஆண்டு ஏப்ரல் 21ம் தேதியன்று சீன மக்கள் விடுதலைப்படை யாங்சி நதியைத் தாண்டியும் வடமேற்கு சீனாவை நோக்கியும் முன்னேறியது சியாங் கே சேகின் தலைமையிலிருந்த கோமிண்டாங் ராணுவம் சின்னா

பின்னமாகியது. உயிர் தப்ப வேண்டி சியாங் கே சேக் பார்மோசா என்று அழைக்கப்படும் தைவான் தீவுக்கு தப்பி ஓடினான். அந்நிய ஆக்கிரமிப்பிலிருந்தும், சியாங் கே சேக் மற்றும் அவனது எடுபிடி ஆட்சியிலிருந்தும் சீனா முற்றிலும் விடுதலை செய்யப்பட்டது.

1949ம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் சீனமக்கள் அரசியல் ஆலோசனை மாநாட்டின் முதல் துவக்கக் கூட்டம் நடைபெறறது. அதில் ஒரு பிரகடனத்தை சமர்ப்பித்து மாவோ பேசினார் : ''சீன மககள் அனைத்தையும் தாங்கி நின்று சமாளித்திருக்கிறார்கள். சீன மககள் குடியரசின் மத்திய மக்கள் அரசாங்கமானது நாட்டு மககள் அனைவருக்கும் தலைமை தாங்கி வழிகாட்டும்; தங்களுடைய சிரமங்களை சமாளிப்பதிலும் பெருமளவிலான பொருளாதார மற்றும் கலாச்சார நிர்மாணத்தில் ஈடுபடவும், பழைய சீனத்தின் பரம்பரைச் சொத்தான வறுமை மற்றும் அறியாமையை ஒழித்துக்கட்டுவதிலும் மக்களின் பொருளாதார மற்றும் கலாச்சார வாழ்வில் உறுதியான மேம்பாடு அடையவும் இந்த அரசாங்கம் மக்களுக்கு தலைமை தாங்கும்'' என்று மாவோ முழங்கினார்.

இந்த மாநாடானது சீன மக்கள் அரசியல் ஆலோசனை மாநாட்டிற்கு பொதுவான திட்டத்தை உருவாககியது. அத்துடன் மத்திய மககள் அரசாங்கத்தின் தலைவராக மாவோவைத் தேர்ந்தெடுத்தது.

அக்டோபர் 1-ம் தேதியன்று லட்சக்கணக்கான மக்கள் திரண்டிருந்த பீகிங்கின் டியனான்மென் சதுக்க மேடையில் நின்று மாவோ சீன மக்கள் குடியரசு உருவாகி விட்டதென்று உலகறிய பறைசாற்றினார்.

உலக சோசலிச இயக்கத்தின் வலுமிக்க தூண்களில் ஒன்றாக நவசீனம் மலர்ந்தது.

சீன மக்களின் புரட்சி வெற்றி பெற்று மக்கள் சீனக் குடியரசு உருவாக்கப்பட்டவுடன் 1949-ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் மாவோ, இந்திய கம்யூனிஸ்ட் கட்சிக்கு வாழ்த்துச் செய்தியொன்றை அனுப்பி வைத்தார். அதில் அவர் குறிப்பிட்டிருந்ததாவது :

''நீண்ட காலத்திய சரித்திரமும் மிகப்பெரிய ஜனத் தொகையும் கொண்டுள்ள மகத்தான ஆசிய தேசிய இனங்களில் இந்தியாவும் ஒன்று. அந்த நாட்டின் பழமையும், அதன் வருங்காலத்திய பாதையும் பல அம்சங்களில் சீனாவை ஒத்தே இருக்கின்றன.

''சுதந்திரச் சீனாவைப்போல இந்தியாவும் ஒருநாள் சோசலிஸ்ட் மக்கள் ஜனநாயகக் குடும்பத்தில் ஓர் உறுப்பினராக இந்த உலகில் எழுந்து நிற்கும். அந்த நாளில் ஏகாதிபத்திய பிற்போக்கு சகாப்தம் மனித வர்க்கத்தின் வரலாற்றிலிருந்தே முடிந்து போகும்''.

சீனப் புரட்சியின் வெற்றி இந்தியாவின் உழைக்கும் மக்களாலும் முற்போக்காளர்களாலும் பெரிதும் வரவேற்கப்பட்டது.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி அச்சமயத்தில் தடை செய்யப்பட்டிருந்தது. கட்சித் தலைமை தலைமறைவாகச் செயல்பட்டு வந்தது. அதன் பல்லாயிரக்கணக்கான தலைவர்களும், ஊழியர்களும் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ்சிறைகளில் அடைக்கப்பட்டிருந்தனர். சீனப்புரட்சியின் வெற்றியைக் கொண்டாடி அவர்கள் சிறைச்சாலைகளுக்குள்ளேயே ஊர்வலங்கள் நடத்தினர். உரத்த குரலில் முழக்கங்கள் எழுப்பி தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர்.

சீனப் புரட்சி மகத்தான வெற்றி பெற்றபின் மாவோ அவரது நெருங்கிய தோழர்களான லீயூ-சோசி.

சூ-என்-லாய், சூடே, டெங்சியோபிங், சென்யீ ஆகியோருடன் சேர்ந்து மக்கள் சீனத்தை சோசலிசப் பாதையில் அழைத்துச் செல்வதற்கான பணிகளில் ஈடுபட்டார். முதல் மூன்று வருடங்களில் நாடு முழுவதிலும் விவசாய சீர்திருத்தங்களும் செய்யப்பட்டன.

1949-ம் வருடம் டிசம்பர் மாதம் மாவோவும், சூ-என்-லாயும் சோவியத் யூனியனுக்கு விஜயம் செய்தனர். சோவியத் அரசாங்கத் தலைவர் ஸ்டாலினுடன் பேச்சுவார்த்தை நடத்தினர். இரு நாடுகளுக்குமிடையே நட்புறவு மற்றும் பரஸ்பர உதவிக்கான ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று. மாவோவுக்கும், சூ-என்-லாயுக்கும், சோவியத் யூனியனில் அளிக்கப்பட்ட மகத்தான வரவேற்பை ஏற்றுக்கொண்டு 1950-ம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் சீனாவுக்குத் திரும்பினார்.

# பிரிந்தவர்கள் கூடினர்

1949-ம் ஆண்டு ஆகஸ்ட் 4-ந்தேதி மாவோவின் சொந்த மாவட்டமான சங்ஷா எதிரியிடமிருந்து விடுவிக்கப்பட்டது. நகர மக்கள் மாவோவிற்கு வாழ்த்துத் தந்தி அனுப்பினர். கோமிண்டாங் வெறியர்களால் கொல்லப்பட்ட தன் அன்பு மனைவி யாங்-கை-குய்யின் தாயார் உயிருடனிருப்பது அறிந்து மாவோ மகிழ்ச்சியடைந்தார். அவருக்கு மாவோ ஒரு வாழ்த்துத் தந்தி அனுப்பினார். வயதான அந்த அம்மையார் சிரமப்படக் கூடாது என்பதற்காக மாவோ மாதந்தோறும் அவருக்கு பணம் அனுப்பி வந்தார்.

சீனப் புரட்சி வெற்றியடைந்தபின் மாவோவின் குடும்பம் மாவோ, அவரது மூன்றாவது மனைவி சியாங்கிங் இரண்டு மகன்கள், இரண்டு மகள்கள் ஆக அவரது குடும்பம்—மீண்டும் ஒன்று சேர்ந்தது. மாவோவின் இரண்டாம் மனைவியின் பெயர் ஹை-ஸிஸன் இவரைக் குறித்த விவரம் எதுவும் கிடைக்கவில்லை.

மாவோ ஒரு பாசமிகு தந்தையாக இருந்தார். தன் புதல்வர்களையும்,புதல்விகளையும் தன்னுடைய நண்பர்கள் போலவே நடத்தினார். அவர்களுடைய மகிழ்ச்சியில் அவரும் பங்குகொண்டார். அவர்கள் வேதனைப்பட்டபொழுது அவர்களுக்கு ஆறுதல் கூறி உற்சாகப்படுத்தினார். ''மக்களை நேசி, மக்களிடமிருந்து கற்றுக் கொள், மக்களுக்கு சேவை செய்'' என்ற அறிவுரையை தன் பிள்ளைகள் சிந்தையிலும் பதித்தார்.

1950-ம் ஆண்டில் மாவோ தன் இரு மகன்களையும் அழைத்து அவர்கள் தங்களுடைய கிராமத்திற்குச்

சென்று தாய்வழி பாட்டியைக் கண்டு அவருக்கு மரியாதை தெரிவிக்கும்படியும், கொல்லப்பட்ட தங்கள் அன்னை யாங்-கை-குயின் சமாதிக்குச் சென்று மரியாதை செலுத்தும்படியும் கூறினார். ஸ்தல மக்க ளுக்கு தன்னுடைய வாழ்த்துக்களைத் தெரிவிக்கும்படி யும் கூறி அவர்களை அனுப்பி வைத்தார்.

1951-ம் ஆண்டில் வட கொரிய நாட்டை பிடிப்பதற் காக அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் மீண்டுமொரு ஆக்கிரமிப்பு யுத்தத்தை நடத்தினர். இதை எதிர்த்து கொரியாவின் தேச பக்தர்கள், முற்போக்காளர்கள் அனைவரும் கிம்-இல்-சுங் தலைமையிலான கம்யூனிஸ்ட் கட்சியின் வழிகாட்டுதலின்கீழ் அணிதிரண்டு போராடி வந்தனர். பலம் வாய்ந்த அமெரிக்க ஏகாதிபத்தியத்தை சின்னஞ்சிறு கொரியநாட்டு மக்கள் முறியடிக்க உதவுவது தங்கள் கடமை என்று கருதிய சீனக் கம்யூனிஸ்ட் கட்சி யும், சீன அரசாங்கமும் கொரிய மக்களுக்கு உதவுவதற் காக தனது பயிற்சி பெற்ற லட்சக்கணக்கான தொண்-டர்களை கொரியாவுக்கு அனுப்பி வைத்தது. முடிவில் அமெரிக்கப் படைகள் முறியடிக்கப்பட்டு வடகொரியா பாதுகாக்கப்பட்டது.

இந்த மகத்தான சர்வதேசக் கடமையில் சீனக் கம்யூ னிஸ்ட் கட்சி பல்லாயிரக்கணக்கான தனது தொண்டர் களின் உயிரை அர்ப்பணித்தது. இதில் தனிப்பட்ட முறையில் மாவோவிற்கும் மிகப்பெரிய இழப்பு ஏற் பட்டது. அவருடைய மூத்த மகனான மாவோ-அனியிங் கொரியாவில் நடைபெற்ற போரில் கொல்லப்பட்டார், அனியிங்கிற்கு திருமணமாகி ஒரு ஆண்டே ஆகியிருந்தது. சிறுவயதிலேயே மாஸ்கோவிற்கு கொண்டு செல்லப்பட்டு அங்கேயே கல்வி கற்று அதன்பின் சோவியத் செஞ்சேனை யில் சேர்த்து படிப்படியாக லெப்டினன்ட் ஆக இருந்தவர் அனுயிங். சோவியத் செஞ்சேனையின் தலைவரான ஸ்டாலினுடைய பாராட்டுதலையும் பெற்றவர். சீனத்

துக்குத் திரும்பிய பின்னர் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையகத்தில் பணியாற்றினார். அச்சமயத்தில் அங்கு பணியாற்றிவந்த ஷாங்குலின் என்ற பெண் தோழருடன் அவருக்கு காதல் ஏற்பட்டது. இருவரும் திருமணம் செய்து கொண்டனர். கொரிய மக்களுக்கு உதவுவதற்காக தானும் ஒரு தொண்டனாகப் போக விரும்புவதாக அனியிங், தந்தையிடமும், மனைவியிடமும் தெரிவித்தார் இருவரும் சம்மதித்தனர். கொரியா சென்று அமெரிக்கப் படைகளுக்கு எதிராக ஆயுதம் ஏந்திப் போராடிய அனியிங் 1950ம் ஆண்டு நவம்பர் 25தேதி போர்க் களத்தில் கொல்லப்பட்டார்.

மகன் இறந்த செய்தியைக் கேள்விப்பட்ட மாவோ மிகவும் வேதனை அடைந்தார் என்ற போதிலும் தன் துக்கத்தை அடக்கிக்கொண்டு மருமகள் ஷாங்குலினுக்கு ஆறுதல் கூறினார். மகன் இறந்த செய்தியை மருமகளிடம் அவர் உடனே கூறவில்லை- எண்ணற்ற தியாகிகளின் உயிர்த்தியாகத்தையும் தன் குடும்பத்திலேயே எவ்வாறு ஐந்து பேர் தியாக வாழ்வு எய்தினார்கள் என்பதையும் மாவோ திரும்ப திரும்ப கூறிக்கொண்டே இருந்தார். ஷாங்குலினுக்கு முதலில் விபரமே புரியவில்லை. பின்னர்தான் தன் கணவர் அனியிங் கொல்லப்பட்டு விட்டார் என்ற அதிர்ச்சி தரும் தகவலையறிந்து ஷாங்குலின் இடிவிழுந்தது போலானார். மாவோவுக்கு எதிரில் அழுதால் அது அவர் உள்ளத்தையும் நோகச் செய்துவிடும் என்று கருதி ஷாங்குலின் தனது அறையிலே கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தார். மாவோவும் ஷாங்குலினுக்கு தொடர்ந்து ஆறுதல் கூறி தேற்றினார். ''இது ஒரு யுத்தம் யுத்தமென்றால் மக்கள் கொல்லப் படுவார்கள். அனியிங் என்னுடைய மகன் என்பதால் சீன—கொரிய மக்களுக்கான போராட்டத்தில் கொல்லப் பட்டிருக்கக் கூடாது என்று நீ கருதக்கூடாது'' என்று கூறிய மாவோ ''இன்று முதல் நீ என்னுடைய மூத்த மகள்'' என்று கூறினார். அனியிங்கின் உடல் சீனாவுக்கு

கொண்டுவர வேண்டுமென்று ஷாங்குலின் விரும்பினார். ஆனால் மாவோ அதற்கு சம்மதம் தர மறுத்துவிட்டார்.

''தியாகிகள் எங்கு வேண்டுமானாலும் புதைக்கப் படலாம் அவர்கள் உடல்களை இங்கு ஏன் கொண்டுவர வேண்டும்? சீனத்திலிருந்து தொண்டர்களாக அனுப்பி வைக்கப் பட்டவர்களில் பல்லாயிரக் கணக்கானோர் தியாகிகளாகி அங்கேயே புதைக்கப் பட்டிருக்கிறார்கள் அல்லவா?'' என்று மாவோ கேட்டார்.

சில வருடங்களுக்குப் பிறகு தன் கணவரின் சமாதி யைக் காண ஷாங்குலின் விரும்பினார். மாவோ இரு தோழர்களை அவருடன் கொரியாவிற்கு அனுப்பிவைத்து போக்குவரத்துச் செலவுக்கான பணத்தையும் தானே கொடுத்தார்.

சீனத் தொண்டர் படை தியாகிகளை புதைத்துள்ள கல்லறையானது பைன் மரங்கள் அடர்ந்த ஒரு மலைப் பகுதியில் அமைந்துள்ளது. அதைச் சுற்றிலும் சிறிய நீரோடைகள் செல்கின்றன. அங்குள்ள ஒவ்வொரு கல்லறையின் முன்பும் அந்த தொண்டனின் பெயரும் அதன் பின்புறத்தில் அந்த தொண்டனைக் குறித்த விபரமும் பொறிக்கப்பட்டுள்ளன. தங்கள் ரத்தத்தை சிந்தி பாட்டாளி வர்க்க சர்வ தேசியப் பதாகையை உயர்த்திப் பிடித்த நூற்றுக்கணக்கான சீன ஆண் பெண் தியாகிகளின் கல்லறையிலுள்ள மாவோ அனியிங்கின் கல்லறையில் பின்வருமாறு பொறிக்கப்பட்டுள்ளது. ''தோழர் மாவோ அனியிங்கின் கல்லறை-ஹுனான் மாகாணம் ஷாவோசாங் பகுதியைச் சேர்ந்த தோழர் மாவோ அனியிங், சீன மக்களின் தலைவரான தோழர் மாசேதுங்கின் மூத்த மகன். 1950ம் ஆண்டு அவர் மக்கள் தொண்டர் படையில் சேர வேண்டுமென்று விரும்பினார் அமெரிக்காவின் ஆக்கிரமிப்பு யுத்தத்தில் கொரியாவுக்கு உதவுவதற்காக அவர் வீரஞ்செறிந்த முறையில்

போரிட்டு 1950ம் ஆண்டு நவம்பர் 25ம்தேதி மரண மடைந்தார். அனியிங்கினுடைய தேச பக்த மற்றும் சர்வதேச உணர்வு இளந் தலைமுறையினருக்கு என்றென்றும் போதனையூட்டட்டும், என்றென்றும் ஆதர்சமூட்டட்டும், தியாகி மாவோ அனியிங்கிற்கு என் றென்றும் இறவாப் புகழ் விளங்கட்டும்.''

தன்னுடைய கணவரின் கல்லறையும் இதர தொண்டர்களின் கல்லறைகளும் சிறப்பான முறையில் பராமரிக்கப்பட்டு வருவதையும், கொரிய மக்கள் வருடத் திற்கு இருமுறை அந்த தியாகிகளுக்கு மனம் நெகிழ்ந்த அஞ்சலியை சமர்ப்பிப்பதையும் கேள்விப்பட்ட ஷாங்கு லின் மன அமைதி கொண்டார், அந்தக் கல்லறையின் பல புகைப்படங்களை எடுத்து சீனாவுக்குத் திரும்பினார். மாவோவிடம் அனைத்தையும் விளக்கினார். மாவோ விற்கும் அது ஆறுதலாக இருந்தது.

# நிர்மாணப் பணியில் நவசீனம்

1953ம் ஆண்டில் மாவோவின் ஆலோசனைப்படி சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக்குழு நாட்டை சோசலிச தொழில் மயமாக்கும் பொருட்டு உற்பத்திச் சாதனங்களை தனி உடமையிலிருந்து சோசலிச உடமை ஆக்குவதற்கான தனது பொதுவான வழிமுறையை வைத்தது. சீனா திட்டமிட்ட, பெருவீத பொருளாதார நிர்மாணத்தில் இறங்கியது; அதிலிருந்து மாவோ பொருளாதாரக் கோட்பாடு, பொருளாதாரக் கொள்கை மற்றும் பொருளாதார நிலைமை குறித்த ஆய்வை செய்வதில் அதிக கவனம் செலுத்தினார் என்பதுடன் அது குறித்து தன்னுடைய சிறந்த கருத்துக்களையும் முன் வைத்தார். கட்சி ஊழியர்கள் அதிலும் குறிப்பாக உயர் மட்ட ஊழியர்கள் பொருளாதாரத்தையும் தொழில் நுட்பத்தையும் கற்று இவ்விரு துறைகளிலும் வல்லுனர்களாவதற்கு கடுமையாக முயற்சி செய்ய வேண்டுமென்று மாவோ அறைகூவல் விடுத்தார். அவ்வாறு செய்தால் தான் பொருளாதார நிர்மாணம் என்ற பணி சிறப்புடன் நடைபெறுமென அவர் சுட்டிக்காட்டினார்.

அதே ஆண்டு ஏப்ரல் மாதத்தில் நடைபெற்ற கட்சியின் அரசியல் தலைமைக்குழு கூட்டத்தில் அவர் பேசுகையில் சீனாவின் சோசலிச நிர்மாணப் பணியில் கிடைத்த ஆரம்ப அனுபவத்தை தொகுத்துக் கூறினார். சீனவிற்கு பொருந்தக்கூடிய வகையில் சோசலிச நிர்மாணப் பாதையையும் அவர் சுட்டிக் காட்டினார். அவ்வாண்டு செப்டம்பர் மாத வாக்கில் உற்பத்திக் கருவிகளில் தனிச் சொத்துரிமை அழிக்கப்பட்டு சோசலிசத்திற்கு மாற்றி அமைக்கும் பாதை முழுமையடைந்தது.

1954ம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் முதல் தேசிய மக்கள் காங்கிரஸ் கூட்டப்பட்டது. அது சீன மக்கள் குடியரசுக்கான அரசியல் சட்டத்தை உருவாக்கியதுடன் அந்தக் குடியரசின் முதல் தலைவராக மாவோவைத் தேர்ந்தெடுத்தது.

அந்த 1954ம் ஆண்டு இந்திய—சீன நட்புறவு மிகச் சிறப்பாக வளர்ச்சியடைந்த ஆண்டாகும். இந்தியப் பிரதமர் ஜவஹர்லால் நேரு, அவ்வாண்டு அகடோபர் மாதத்தில் மககள சீனத்திற்கு விஜயம் செய்தார். சீன அரசாஙகமும் சீனமக்களும், நேருவுக்கு மகத்தான வரவேற்பு அளித்தனர். அவர் சென்ற இடங்களி லெல்லாம் லட்சககணக்கான மக்கள் உற்சாகமாக அவரை வரவேற்றனர். இது நேருவை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியது.

முதன் முறையாக சந்தித்துக் கொண்ட நேருவும், மாவோவும் மனந்திறந்து உரையாடினர். கருத்துப் பரிமாற்றம் செய்து கொண்டனர். அதன்பின் நேரு, சீனாவின் பல பகுதிகளுக்கு சுற்றுப்பயணம் செய்தார்.

சீன பயண முடிவில் இந்தியப் பிரதமர் நேரு, மாவோ வை நேரில் சந்தித்து விடைபெற்றுக் கொள்ள வந்தார். மாவோ, சகோதர பாசத்துடன் நேருவின் கரங்களைப் பிடித்து குலுக்கினார். "பிரிந்து போக விடை கொடுப்பதைக் காட்டிலும் அதிகமான துயரம் வேறு கிடையாது. புதிதாக ஒருவரைப் பரிச்சயம் செய்து கொள்வதைக் காட்டிலும் அதிக மகிழ்ச்சி வேறொன்றும் கிடையாது" என்ற ஒரு சீனக் கவிதையைக் கூறி நேரு வுக்கு பிரியாவிடை கொடுத்தார்.

பெய்ஜிங்கிலிருந்து புறப்படும்முன் நேரு கூறினார்:

சீனாவின் தலைவர் மாசேதுங்கிடம் எனக்கு ஏற்பட்ட பரவசத்தைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

மாசேதுங் ஒரு சரித்திர புருஷர்; மகத்தான போர் வீரர்; மாபெரும் புரட்சியாளார். பெரிய நிர்மாணகர்த்தா. இப்பொழுது அவர் மாபெரும் சமாதானகர்த்தாவாகவும் ஆகட்டும்.''

# "நூறு பூக்கள் பூக்கட்டும்"

1957-ம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் "மக்களிடையே உள்ள முரண்பாடுகள் சரிவரக் கையாள்வது குறித்து" என்ற தலைப்பில் மாவோ பேருரை ஒன்று நிகழ்த்தினார். அதில் சோசலிச சமூகத்தில் உற்பத்திக் கருவிகளின் உரிமை என்பது சோசலிச தன்மை வாய்ந்த தாக மாற்றி அமைக்கப்பட்டபின் அந்த சோசலிச சமூகத்தில் ஏற்படக்கூடிய முரண்பாடுகளை ஆழமாக ஆராய்ந்தார். மக்களிடையே உள்ள முரண்பாடுகள் இருவேறு தன்மை வாய்ந்த, இருவேறு வித்தியாசப்பட்ட இருவேறு வகைப்பட்ட முரண்பாடுகளாக அவர் பிரித்தார். ஒன்று பகைமை நிறைந்த முரண்பாடு இது மக்களுக்கும் அவர்களுடைய எதிரிக்குமிடையேயான முரண்பாடாகும். மற்றொன்று பகைமையற்ற முரண்பாடு, இது மக்கள் தம்மிடையே உள்ள முரண்பாடு என்று பிரித்துக்காட்டிய மாவோ, சீனத்தின் அரசியல் வாழ்வில் இந்த முரண்பாடுகள் ஒரு பிராதன பிரச்னை என்றும் அதை சரியாக கையாள்வது அவசியம் என்று வெளிப்படையாக சுட்டிக் காட்டினார். அரசியல் துறையில் நீண்ட காலத்திற்கு சீனக் கம்யூனிஸ்ட் கட்சியும் இதர ஜனநாயக கட்சிகளும் இருக்க வேண்டியஅவசியம் உள்ளது.ஒரு புதியசமூகத்தின் தேவைகளை சமாளிக்கும் பொருட்டு பரஸ்பர மேற்பார்வை என்ற வழியைக் கடைப்பிடிக்க வேண்டியிருக்கும். கலைகள் மற்றும் விஞ்ஞானிகளின் முன்னேற்றத்தை ஏற்படுத்தும் பொருட்டு ஒரு செழுமை மிக்க சோசலிசக் கலாசாரத்தை மலரச் செய்வதன் மூலம் "நூறு பூக்கள் பூக்கட்டும், நூறு கருத்துக்கள் மலரட்டும்" என்ற கொள்கையை கட்சி கடைப்பிடிக்க வேண்டுமென்று மாவோ கருதினார்.

1957-ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் மாவோவின் தலைமையில் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் தூதுக் குழு மாஸ்கோவிற்குச் சென்று அக்டோபர் புரட்சியின் 40வது ஆண்டு விழாவில் கலந்து கொண்டது. அத்துடன் அங்கே நடைபெற்ற சோசலிச நாடுகளின் கம்யூனிஸ்ட் மற்றும் தொழிலாளர் கட்சி பிரதிநிதிகளின் கூட்டத்திலும் மாவோ கலந்து கொண்டார். அதைத் தொடர்ந்து நடைபெற்ற 64 கம்யூனிஸ்ட் மற்றும் தொழிலாளர் கட்சிகளின் கூட்டத்திலும் கலந்து கொண்டார். இவ்விரு கூட்டங்களின் பிரகடனங்களிலும் அவர் கையெழுத்திட்டார்.

1958-ம் ஆண்டு ஆரம்பத்தில் கட்சி மற்றும் அரசாங்க வேலையின் கவனமானது தொழில்நுட்ப பிரச்னை குறித்தும் சோசலிச நிர்மாணம் குறித்தும் திருப்பப்பட வேண்டுமென்று மாவோ கூறினார். அவ்வாண்டு பிற்பகுதியில் மாபெரும் பாய்ச்சல் என்ற இயக்கத்தை மாவோ துவக்கினார். இது உற்பத்தியைப் பெருக்குவதற்கு கிராம மக்களை ''கம்யூன்களில்'' அணி திரட்ட வேண்டும் என்பதாகும். மாவோவின் இந்தத் திட்டம் தோல்வி கண்டதோடு கட்சியையும் நாட்டையும் ''இடது சாரித் தவறுகளுக்கு'' இட்டுச் சென்றது. வெகு விரைவிலேயே இந்த தவறுகளை உணர்ந்த மாவோ அதைத் திருத்த நடவடிக்கை எடுத்தார்.

இது குறித்து சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் மதிப்பிற்குரிய தலைவர்களுள் ஒருவரான டெங்-ஷியோ-பிங் பின்வருமாறு கூறுகிறார்: ''மாபெரும் பாய்ச்சல் இயக்கமானது தவறானதாக இருந்தது. ஆனால் அது முற்றிலும் மாவோவின் தவறல்ல அவரைச் சுற்றி இருந்தவர்களும் பொறுப்பாவார்கள். யதார்த்த விதிகளுக்கு நேர் எதிராக அதாவது பொருளாதாரத்தை ஒரே அடியில் உயர்த்துவது என்ற முயற்சியில் நாங்கள் இறங்கினோம். எங்களுடைய அகநிலை விருப்பங்கள்

யதார்த்த விதிகளுக்கு எதிராக போனதால் இழப்புகள் தவிர்க்க இயலாதவையாயின. இதற்கான முதன்மை யான பொறுப்பு தலைவர் மாவோவையே சேர்ந்தது. ஆனால் தவறைப் புரிந்து கொள்வதற்கு அவருக்கு அதிக காலம் பிடிக்கவில்லை. நாங்கள் அனைவரும் அத்தவறை புரிந்து கொள்ளும் முன்பே ஒரு சில மாதங்களிலேயே புரிந்து கொண்ட மாவோ அதைத் திருத்துவதற்கான வழியையும் முன்வைத்தார்.''

மாவோ 1959-ம் ஆண்டு ஜீன் 25-ந்தேதி தன்னுடைய சொந்த நகரான ஷாவோஷான் நகருக்கு வருகை தந்தார். சுமார் 32 ஆண்டுகளுக்கு முன்பு இந் நகரைவிட்டு வெளியேறிய மாவோ இப்பொழுதுதான் முதன்முறையாக இங்கே வந்தார். ஸ்தல மக்கள் அனைவரும் மகிழ்ச்சிக் கண்ணீர் வடிய அவரை வரவேற்றனர்.

தன்னுடைய பழைய வீட்டிற்குள் நுழைந்த மாவோ, ஒவ்வொரு அறையாக நுழைந்து பார்த்தார். அது பாதி செங்கல்லினாலும், பாதி வைக்கோலினாலும் கட்டப்பட்டிருந்த வீடு. 1927-ம் ஆண்டு கோமிண்டாங் படை கம்யூனிஸ்ட்டுகள்மீது கொலைவெறித் தாண்டவத்தைக் கட்டவிழ்த்துவிட்டபோது, மாவோவின் வீடு முற்றிலும் நாசமாக்கப்பட்டது. அவருடைய நிலம் பறிமுதல் செய்யப்பட்டது. மாவோவின் மனைவியும், சகோதரியும் சுட்டுக் கொல்லப்பட்டனர். புரட்சிக்குப் பின், கிராம மக்கள் கூறியபடி, சீன அரசாங்கம் அந்த வீட்டை முன்பிருந்ததுபோலவே செப்பனிட்டு வைத்தது.

வீட்டின் மைய அறையில் மாவோவின் தாய்-தந்தை புகைப்படம் வைக்கப்பட்டிருந்தது மாவோ அதன் முன் நின்று மௌனமாக அஞ்சலி செலுத்தினார். வீட்டின் மற்றொரு புறத்தில் மாவோவும், அவருடைய இரு

சகோதரர்களும் தங்கள் தாயாருடன் நிற்கும் புகைப் படம் மாட்டப்பட்டிருந்தது. மாவோ அங்கேயும் மௌன மாக நின்று தன் தாய்க்கும், இரு சகோதரர்களுக்கும் அஞ்சலி செய்தார். அவருடைய இரு சகோதரர்களும் புரட்சி யுத்தத்தில் எதிரிகளால் கொல்லப்பட்டனர்.

மாவோ வீட்டிலிருந்து புறப்பட்டு அருகிலிருந்த மலைக் குன்றை நோக்கி நடந்தார். புதர்களும், செடி களும் அடர்ந்திருந்த பகுதியில் அவருடைய தாய், தந்தையின் சமாதிகள் இருந்தன. அங்கு சென்று மாவோ அஞ்சலி செய்தார். அந்த கிராம மக்கள் இந்த சமாதிகளை ரகசியமாகப் பாதுகாத்து வந்தனர். ஏனென்றால் செஞ்சேனையை மாவோ உருவாக்கி வந்ததை அறிந்து ஆத்திரம்கொண்ட ஹே ஜியான் என்ற ஹுனானைச் சேர்ந்த யுத்தப்பிரபு, மாவோவின் தாய் தந்தையின் சமாதியை உடைத்து அவர்களின் எலும்பு களை வெளியே எடுத்து எறியும்படி தன் சிப்பாய்களுக்கு கட்டளையிட்டான். எவருடைய தாய் தந்தையின் எலும்புகள் எறியப்படுகின்றனவோ அவருக்கு தீமை ஏற்படுமென்று அக்காலத்தில் ஒரு கருத்து நிலவி வந்தது. எனவே மாவோவுக்கும், செஞ்சேனைக்கும் தீங்கு ஏற்பட வேண்டுமென்பதற்காக அந்த யுத்தபிரபு இவ்வாறு உத்தரவிட்டான்.

அதன்படி அவனுடைய சிப்பாய்கள், மாவோவின் தாய்—தந்தை சமாதியைத் தேடினர். அவர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. கிராம மக்களை தொல்லைப் படுத்தினர். ஒரு ஏழை விவசாயி மிகச் சாதுர்யமாக அவர்களை ஏமாற்றினார். அந்தக் கிராமத்தைச் சேர்ந்த ஒரு நிலப்பிரபு மற்றும் அவன் மனைவி சமாதி யைச் சுட்டிக்காட்டி இதுதான் மாவோவின் தாய் தந்தை சமாதி என்று கூறினார். அந்தச் சிப்பாய்களும் அவற்றை உடைத்தெறிந்து எலும்புகளை வெளியே

போட்டுவிட்டு போய்விட்டனர். இவ்வாறு மாவோவின் தாய்—தந்தை சமாதி பாதுகாக்கப்பட்டது.

அதன்பின் மாவோ, தன் அன்பு மனைவி யாங்-கை-குய்யின் சமாதிக்குச் சென்று மௌனமாக அஞ்சலி செய்தார்.

மாவோ வயல்வெளிக்குச் சென்று பசுமையாக வளர்ந்திருந்த பயிர்களைக் கண்டு மகிழ்ச்சியடைந்தார். கிராம மக்களிடம் அன்பாக உரையாடினார். அன்று இரவில் அவர் தனது நினைவுகளைத் தேக்கி ஒரு கவிதை எழுதினார்.

அடுத்த நாள் மாவோ, தன் பயணத்தை முடித்துக் கொண்டு பீகிங் நகருக்குப் புறப்பட்டார். புறப்படும் முன் ஸ்தல தோழர்களிடம் பின்வருமாறு கூறினார்:

''கம்யூனிஸ்ட்களாகிய நாம் பொருள் முதல்வாதிகள் மூடநம்பிக்கை கொண்டவர்கள் அல்ல. என் பெற்றோர் எனக்கு உயிரளித்தனர். கட்சியும், தோழர்களும், ஆசிரியர்களும், நண்பர்களும் எனக்கு கல்வி புகட்டினர். அடுத்த முறை நான் வரும்பொழுது அவர்களுடைய சமாதிகளுக்கு மீண்டும் செல்வேன்''

மாவோ 1959-ம் ஆண்டு சீனமக்கள் குடியரசின் தலைவர் பதவியிலிருந்து விலகினார். தன் கவனம் முழுவதையும் கட்சிப் பணிகளிலேயே செலுத்தினார். அதைத் தொடர்ந்து லியூ—சோ—சி மக்கள் குடியரசின் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

1960-ம் ஆண்டுகளின் முற்பகுதியில் உலக கம்யூனிஸ்ட் இயக்கத்திற்குள் எழுந்த திரிபுரவாதப் போக்குகளுக்கு எதிரான போராட்டத்தில் மாவோவும் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியும் முன் நின்றன. ஆனால் அவ்வாண்டுகளின் பிற்பகுதியில் சீனத்தின் உள்நாட்டு நிலைமை

குறித்தும் வெளிநாட்டு நிலைமை குறித்தும் ''கலாச் சாரப் புரட்சி'' என்ற தீங்கான இயக்கம் சீனாவில் உரு வெடுத்தது. சீனம் ஒரு பெரும் அரசியல் கொந்தளிப் பைக் காணவேண்டிய நிலை ஏற்பட்டது. இதைப் பயன்படுத்திக்கொண்டு சீனப் படையின் தளபதியாக இருந்த லின்-பியாவோவும், [illegible], மாவோவின் மூன்றாவது மனைவி சியாங்சிங்கும் அராஜகப்பாதையில் திருப்பிவிடவும், சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் முன்னணிப் பங்கை அழிக்கவும் சதி செய்தனர். இந்தத் தவறு சீனத் தோடு மட்டும் நிற்கவில்லை. உலகின் பல நாடுகளில் கம்யூனிஸ்ட் இயக்கங்களை பிளவுபடுத்துவதற்கும் சீர் குலைப்பதற்கும் இட்டுச் சென்றது. சீனாவில் பல தலைவர்கள் குறிப்பாக லியு சோ சி, டெங்சியோ-பிங் போன்றவர்கள் கட்சித் தலைமையிலிருந்து அகற்றப் பட்டனர். லியூ சோ சி சீனமக்கள் குடியரசின தலைவர் பதவியிலிருந்து அகற்றப்பட்டு சிறை வைக்கப்பட்டார். நால்வர் கும்பல் என்ற ஒரு குழு (இந்த நால்வர் கும்பலில் வாங்ஷுங்வென், சாங்சுன்சியாவ், சியாங்சிங், யாவ் வென் யுவான் ஆகியோர் இடம் பெற்றிருந்தனர். எனவே இதனை சுருக்கமாக 'வாங்-சாங்-சியாங்-யாவ் கும்பல்' என்று அழைப்பதுண்டு.) அதிகாரத்தைப் பிடிக்க முயன்றது. மாவோவின் மேற்கோள்கள் அடங்கிய ''சிவப்பு புத்தகமே'' வேதவாக்காக கருதப்படவேண்டு மென்று இந்த கும்பல் கூறியது.

# மாபெரும் மனிதன் மறைந்தார்

சீனத்திற்கு நாசம் விளைவித்த இந்தக் கொள்கையானது பத்தாண்டு காலம் நீடித்தது. ஒருகட்டத்திற்குப் பிறகு இந்த இயக்கம் தவறான பாதையில் போவதைக் கண்ட மாவோ அதைத் திருத்துவதற்கு பெரும் முயற்சி செய்யவேண்டி இருந்தது. கட்சியின் அரசியல் தலைமைக் குழு உறுப்பினராயிருந்த அவர் மனைவியே இதில் சம்பந்தப்பட்டிருந்ததாலும், நோய்வாய்ப்பட்டு சரிவரப் பேச இயலாத நிலையில் இருந்த மாவோ உண்மை நிலைமையை தெரிந்துகொள்ள முடியாததாலும் கட்சியின் உண்மையான தலைவர்கள் அவரை அவ்வப்போது சந்திக்க முடியாததாலும் இந்த தவறை திருத்தும் பணி சிரமத்துடன் நடைபெற வேண்டியிருந்தது. சூ என் லாய், டெங் சியோ பிங் போன்ற தலைவர்களின் பொறுமையான, விடாப்பிடியான முயற்சிகள் காரணமாக, சீனக் கம்யூனிஸ்ட் கட்சி மற்றும் சீன செஞ்சேனையிலிருந்த உண்மையான கம்யூனிஸ்ட்டுகள் எடுத்த நிலைபாட்டின் காரணமாக கலாச்சாரப் புரட்சி என்ற எதிர்ப்-புரட்சி இயக்கம் தோல்வியடையத் துவங்கியது, நால்வர் கும்பல் தனிமைப்பட்டது.

இந்தப் பின்னணியில் 1976-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 9-ம் தேதியன்று மாவோ இயற்கை எய்தினார். அது உலக கம்யூனிஸ்ட் இயக்கத்திற்கும், குறிப்பாக சீனக் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் மாபெரும் இழப்பாகும்.

ஏகாதிபத்தியவாதிகளின் சூழ்ச்சி காரணமாக அபினி மயக்கத்தில் ஆழ்த்தப்பட்டிருந்த கோடானு கோடி சீன மக்களை, யுத்த பிரபுக்களின் பண்ணையடிமைகளாக வாழ்ந்து கொண்டிருந்த கோடானுகோடி சீன

மக்களை அவைகளில் இருந்து விடுவித்து வறுமையையும் பட்டினியையும் ஒழித்து அன்னிய ஏகாதிபத்திய வாதிகள் மற்றும் நிலப்பிரபுக்களின் சுரண்டலுக்கு முடிவுகட்டி சீன மக்களை சோசலிசப் பாதையில் நடைபோடச் செய்த மகத்தான மனிதர் மா சே துங் மறைந்துவிட்டார். அவரது உடல் பீகிங் (தற்போதைய பெய்ஜிங்) நகரிலுள்ள டியனான்மென் சதுக்கத்தில் உள்ள அரங்கில் வைக்கப்பட்டுள்ளது.

மாவோ ஒரு சிறந்த மார்க்சீய மேதை; போர்த்தந்திர வல்லுனர்; சிறந்த எழுத்தாளர்; மக்களிடமிருந்து கற்றுக் கொண்டு மக்களுக்கு சேவை செய் என்று வலியுறுத்திய மக்கள் தலைவர்; அவர் மிகவும் நேசித்தது உண்மை, எளிமை, சேவை. அவர் மிகவும் வெறுத்தது பொய்மை, பகட்டு, ஆடம்பரம், அவர் ஒரு சிறந்த கவிஞர்.

நூற்றாண்டு காலமாக அறியாமையிலும், மூடநம்பிக்கையிலும், வறுமையிலும் ஆழ்த்தப்பட்டுக் கிடந்த கோடானு கோடி சீனமக்களுக்கு விழிப்பூட்டி, மயக்கத்திலிருந்து மீட்டு நவசீனாவை உருவாக்கிய நவயுக சிற்பி அவர். மார்க்சீய-லெனினிய தத்துவத்தைக் கற்று அதை சீனாவின் நிலைமைகளுக்கேற்றாற்போல் பிரயோகித்து, அந்த தத்துவத்தை சீனாவின் ஆளும் தத்துவம் என்ற நிலைக்கு உயர்த்திய மார்க்சீய மேதை அவர்.

ஏகாதிபத்திய வல்லூறுகளின் வேட்டைக்காடாக விளங்கிய சீன பூமியை மீட்டு அதை மக்கள் சீன குடியரசாக மலரச்செய்த மாபெரும் அரசியல் தலைவர் அவர்! வலுவிழந்து கிடந்த பிரபுத்துவ சீன நாட்டை அடியோடு மாற்றி அது ஒரு வலிமைமிக்க சோசலிச நாடாக மாறுவதற்கு வித்திட்ட மகத்தான மனிதர் அவர். அந்த மகத்தான மனிதர் மா சே துங்கை மக்கள் சீனம் ஒருபோதும் மறக்காது!



